





## அவனுக்கு ஒவ்வொரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

### தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

**இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. l-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது. இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்– அவன் மனமாரச் சாப்பிடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள் !**



இன்க்ரிமின்* வளரும்
குழந்தைகளுக்கெனவே
உண்டாக்கப்பட்ட ஒரு
லெடர்லி தயாரிப்பு.

## இன்க்ரிமின்*...
## வளர்ச்சிக்கு
## மிகவும் சிறந்தது

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்:
10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒரு
தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்




லெடர்லி' டிவிஷன். ஸயனமிட் இந்தியா லிமிடெட்



# கேசம் உதிருகிறதே என்ற கவலையா?

## இன்றே ஸில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்கி உங்கள் கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்

**இந்த அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்.**

கேச உதிர்வு. உச்சந்தலையிலே தினவு. கார்போல் வரண்ட உரோமம். உங்கள் கேசத்திற்கு உகந்த ஊட்டமில்லை என்பதற்கான அறிகுறிகள் இவை. ஊட்டமின்மை தான் இளமையிலேயே வழுக்கை விழக் காரணமாகிறது. அந்த ஊட்டமின்மைக்கு உரிய நிவாரணம் ஸில்விக்ரின்—கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

**ஸில்விக்ரின் எப்படி வேலை செய்கிறது.**

18 அமினோ-அமிலங்களை உங்கள் கேசத்திற்கு உணவாக அளிக்கிறது இயற்கை. இந்த அமினோ—அமிலங்கள் எல்லாமே அடர்வாக ஒன்று செறிந்த வடிவில் கிடைக்கச் செய்வது ஸில்விக்ரின் ஒன்றே. அது வேகமுடன் மயிர்க்கால்களை ஊடுருவி, ஊட்டமளித்து உரமேற்றி, பாங்கான கேச வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

**உபயோக விதிமுறைகள்:**

உங்கள் உச்சந்தலைமீது அன்றாடம் இரு நிமிட நேரம் ப்யூர் ஸில்விக்ரின் தேய்த்திடுங்கள். கேச நிலை அபிவிருத்தி அடையும் வரை உபயோகியுங்கள் ப்யூர் ஸில்விக்ரின். கேச நலம் மீண்டு விட்டதென்றால் அதன் பின் கேச நலனைக் காத்துக் கொள்ளத் துணை புரிவது ஸில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்-ப்யூர் ஸில்விக்ரின் அடங்கிய, எண்ணெய் அடிப்படை கொண்ட லோஷன்.

ஆல் அபௌட் ஹேர் (All About Hair) என்ற புத்தகத்தின் இலவசப் பிரதியைப் பெற, எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 727, பம்பாய்-1.




ஸில்விக்ரின் தயாரிப்புகள்—ஆடவர், பெண்டிர் யாவரும் உபயோகிக்கத் தக்கவை.

**ஸில்விக்ரின்**

கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

LPE-Aiyars S, 1 TAM

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, புரட்டாசி 1 - செப்டம்பர் 17



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.








தட்டில் ஒன்றுமில்லையா?
இதைச் சாப்பிட்டுப் பாரேன்!
1968-69 திட்டம்
மக்கள்
நான்காம் திட்டம்









சம்பள முடக்குத் திட்டம்
பஞ்சப்படிக் கோரிக்கை
மொரார்ஜி



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 7



# சாக்ளா விலகினார்!

உள்நாட்டு விவகாரங்களை வெற்றிகரமாகச் சமாளிக்க முடியாத போது, வெளி நாட்டு விவகாரங்களில் ஏதாவது ஒரு கோஷத்தை எழுப்பி மக்களின் கவனத்தைத் திசை திருப்புவது சாதாரணமாக எந்த அரசாங்கமும் பின்பற்றுகிற ஒரு வழக்கமாகி விட்டது. இதற்கு மாறாக வெளி நாட்டு மந்திரி ஸ்ரீ சாக்ளா அவர்கள் தமது ராஜிநாமாவின் மூலம் உள்நாட்டில் ஏற்பட்டுள்ள ஒரு குழப்ப நிலையில் மக்களின் ஈடுபாட்டை வலுவாகத் திருப்பி விட்டிருக்கிறார். இது வரவேற்க வேண்டியதே.

எனினும் இன்னொரு விஷயத்தை இங்கேயே குறிப்பிட வேண்டியது அவசியம். மொழிப் பிரச்னை ஒரு முக்கியமான உள்நாட்டு விவகாரமே எனினும், இப்பிரச்னை இதைவிட முக்கியத்துவம் வாய்ந்த இன்னொர் உள்நாட்டுப் பிரச்னையாகிய பொருளாதார நெருக்கடியிலிருந்து நாட்டின் கவனத்தைத் திருப்பி வருகிறது. ஸ்ரீ சாக்ளா அவர்கள் பெரியதொரு பிரச்னையின் மீது பதவியைத் துறந்திருப்பதை எண்ணும் போது, இதனிலும் பெரிய பொருளாதாரப் பிரச்னையில் இதே போல் மத்திய மந்திரி சபையில் ஒருவிதமான கலகலப்பும் ஏற்படவில்லையே என்று வருந்தாதிருக்க முடியாது. மொழிப் பிரச்னை மட்டுமில்லை, பொருளாதாரப் பிரச்னையையும் இன்றைய மந்திரி சபையால் தீர்த்து வைக்க முடியாது. உழைப்பு, ஒழுக்கம் என்ற இரண்டிலும் மக்களுக்குப் புதிதான ஒரு பிடிப்பை ஏற்படுத்தித் தந்து, பொருளாதாரத்தை அதன் இயற்கைப்படி வளர வழி செய்யும் ஆட்சித் தலைமை தான் இன்றைய முதல் தேவை. அதை ராஜாஜி கூறுவது போன்ற கட்சிப் பற்றற்ற தேசிய அறிஞர் குழு தான் நல்க முடியும். ஆனபடியால், மந்திரி சபையில் தற்போது ஏற்பட்டுள்ள ராஜிநாமா பற்றி எண்ணும் போதே, இந்த மந்திரி சபையே அடியோடு ராஜிநாமாக் கொடுக்க வேண்டிய அதி முக்கியமான பொருளாதாரப் பிரச்னையையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

ஸ்ரீ சாக்ளாவின் மகத்தான காரியத்தை அனைவரும் பாராட்ட வேண்டுமெனில், ஹிந்தியர் அல்லாத நாம் விசேஷமாகப் பாராட்ட வேண்டும். ஹிந்தி வெறியரின் போக்கு எவ்வளவு பயங்கரமானது என்பதற்கு இதைக் காட்டிலும் சான்று வேறு தேவையில்லை. ஸ்ரீ சாக்ளா அவர்கள் ஹிந்தியோ மற்ற பிரதேச மொழிகளோ என்றுமே போதனை மொழிகளாகக் கூடாது என்பவரல்ல. பிரதேச மொழிகளைப் புகுத்தும் விரைவையே அவர் வன்மையாகக் கண்டிக்கிறார். தமது ராஜிநாமாக் கடிதத்தில், "இறுதியில் ஆங்கிலத்தின் இடத்தை ஹிந்தி பெற வேண்டும் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்" எனக் கூறியுள்ளார். இப்படிப்பட்டவரே தமது மந்திரி பதவியைத் துறக்குமளவுக்கு ஹிந்தி வெறியர்கள் தீவிரமாக இருக்கிறார்கள் என்பது நம் அனைவர் கண்களையும் நன்றாகத் திறந்துவிட வேண்டும்.

ஆங்கிலம் இத்தனை ஆண்டுக் காலமாகத் தேசத்தின் சர்வ கலாசாலைகளையெல்லாம் ஒன்றாக இணைத்து, நாட்டின் படிப்பாளிகளை ஒரு குடும்பமாக்கி வந்திருக்கிறது. அந்தப் பணி பாழாகக் கூடாது என்பதற்காகத் தமது அமைச்சப் பணியைத் துறந்திருக்கிறார் ஸ்ரீ சாக்ளா. இச்சமயத்தில் அவர் பதவி ஏற்ற சூழ்நிலையை நினைத்துப் பார்க்க வேண்டும். பிரிட்டனில் ஹைகமிஷனராக இருந்த சாக்ளா அவர்கள் அந்தப் பதவியை விட்டுத் தில்லி மந்திரி சபையில் சேருமுன், ராஜாஜியைச் சென்னையில் சந்தித்தார். அப்போதே ராஜாஜி கூறினார்: 'உங்கள் மெஜாரிட்டிக்குப் பங்கம் வராதிருக்க வேண்டும் என்பதை நினைவில் வைத்திருங்கள்' என்று. அவர் வேடிக்கைக்குச் சொல்லவில்லை என்பதை இன்றைய நிகழ்ச்சி நிரூபித்து விட்டது.

ராஜாஜி எதிர்பார்த்த நெருக்கடி உண்டாகி. ஸ்ரீ சாக்ளாவும் நம் வியாதிக்குப் பங்கமில்லாமல் பதவி துறந்து விட்டார். அதன் நியாயத்தை எவரும் உணருமாறு பிரதமருக்கு அருமையாக விளக்கிக் கடிதமும் எழுதியுள்ளார். என்றாலும் பிரதமரால் இந்த நியாயத்தை உணர முடியாதது பரிதாபம். தம் ஆட்சியாளருக்கு விவேகமே உதயமாகப் போவதில்லை என்பதற்கு இது ஓர் உதாரணம்.

ஹிந்தி என்றோ ஒரு நாள் ஆங்கிலத்தின் இடத்தைப் பெற வேண்டும் என்று ஸ்ரீ சாக்ளா கூறினாலும் இதில் பொருளில்லை. இந்த வாசகத்தை எழுதிய காகிதத் துண்டின் பெறுமானம்கூட வாசகத்தின் பொருளுக்குக் கிடையாது. ஸ்ரீ சாக்ளாவின் உள் மனம் அவரது கடிதத்திலேயே நன்கு புலனாகிறது. ஆங்கிலமே சர்வகலாசாலைகளிலும், ஸயன்ஸ் கல்லூரிகளிலும், தொழில் நுட்ப நிலையங்களிலும் போதனை மொழியாக நீடிக்க வேண்டும் என்ற அவரது கருத்து தெளிவாகத் தெரிகிறது. ஸ்ரீ சாக்ளாவைப் போலவே கருதும் மற்றவர்களும் இதே போல் வெளிப்படையாக அபிப்பிராயம் தெரிவித்து, உரிய நடவடிக்கையும் எடுத்தால் எவ்வளவோ சிறப்பாக இருக்கும். தமிழக கவர்னர் ஸ்ரீ உஜ்ஜல் ஸிங் ஒருவரேனும் இவ்வாறு மனம் திறந்து, சமீபத்தில் பட்டமளிப்பு விழாவில், ஆங்கிலமே போதனை மொழியாக நீடிக்க வேண்டும் எனக் கூறியது மகிழ்ச்சிக்குரியது.

பதவியிலிருந்து விலகிய ஸ்ரீ சாக்ளாவுக்கு மரியாதை செலுத்துகிறோம்; பாராட்டு வழங்குகிறோம். அவர் குறிப்பிட்டது போல் நிகழ்காலம் மட்டுமின்றி எதிர்காலத்தையும் பாதிக்கும் ஒரு பிரச்னையில் ஈடுபட்டிருக்கிறோம். மற்ற தவறுகளைத் திருத்துவதுபோல் இதில் செய்யும் தவற்றைத் திருத்த முடியாது என அவர் எடுத்துக்காட்டியிருப்பதும் முழு உண்மை. இச்சந்தர்ப்பத்தில் வீண் கோஷத்தையும் போலி உணர்ச்சியையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, உண்மையோடு பேச வேண்டும், உண்மையோடு சிந்திக்க வேண்டும், உண்மையோடு செயலாற்ற வேண்டும். ஸ்ரீ சாக்ளா வழி காட்டி விட்டார். இனி சர்வகலாசாலைகள் போராட்டத்தைத் தொடர வேண்டும்; தலைதெறிக்கக் காரியத்தில் குதித்துள்ள யதேச்சாதிகாரிகளின் மடமையை எதிர்ப்பது இனி சர்வகலாசாலைகளின் பணி.

# மலேசிய இந்தியருக்கு!

மலேசியா சர்க்காருக்கு எதிராக மலேசியாவாழ் இந்தியக் குடிமக்களை, இந்தியாவிலிருந்து வரும் சிலர் தூண்டி விடுவதாக மலேசியப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் கூறியிருக்கிறார். இந்தச் சதிக்குப் பலியாகாமல் எச்சரிக்கையோடு இருக்குமாறு மலேசியா வாழ் இந்திய குடிமக்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

துங்கு அப்துல் ரஹ்மான் அவர்கள் சொல்வது போல், இந்தியாவிலிருந்து அப்படி யாராகிலும் மலாய் நாட்டுக்குச் சென்று தூண்டி விட்டிருப்பார்களானால் அவர்களைப் போன்ற துரோகிகள் இருக்க முடியாது. அவர்கள் பிறந்த தாய்நாட்டுக்குத் துரோகம் செய்வதோடு, மலேசிய நாட்டில் அமைதியோடும் நட்போடும் வாழும் இந்திய மக்களுக்கும் துரோகம் செய்தவர்களாகிவிடுகிறார்கள். இந்தியாவின் மீது சீனப் படையெடுப்பு நிகழ்ந்த போது, இந்தியாவுக்குத் தனது ஆதரவை முதலில் தெரிவித்த நாடு மலேசியாதான்.

மலேசிய நாட்டுக்கு ம. பொ. சி. சென்றபோது, அன்று இந்தோனேசிய சர்வாதிகாரியாயிருந்த கர்ணா மலேசியா மீது படையெடுப்புச் செய்வாரோ என்ற கெடுபிடியான யுத்தச் சூழ்நிலை பரவியிருந்தது. அப்போது அங்கு வாழும் இந்தியர்கள் மலேசியாவின் ராணுவத்தில் ஏராளமாகச் சேர்ந்து, அந்நியப் படையெடுப்பிலிருந்து அந்நாட்டைப் பாதுகாப்பதைத் தங்கள் முதல் கடமையாகக் கொள்ள வேண்டும் என்று ம. பொ. சி. மூலம் ராஜாஜி செய்தி அனுப்பினார். இதை இன்று நாமும் மலேசியத் தமிழர்களும் அவர்களைத் தூண்டி விடுவோரும் நினைவுகொண்டு பயன்பெறுவோம்.



**காமகோடியின் கருணைமொழி**

நாம் நிறைந்து இருந்தால்தான் பிறருக்குச் சொல்ல யோக்யதை உண்டு. என்னிடம் குறை இருந்தால் நான் உபதேசிப்பது பிறரை ஏமாற்றுவதுதான். ஆனால் பகவான் அநுக்ரகம் பூரணமாக எனக்கு வந்து நிறைவு ஏற்பட்டுவிட்டால் அப்புறம் யாருக்கும் உபதேசம் பண்ணத் தேவையே இல்லை. நிறைவு வராவிடினோ, இப்படி உபந்நியாசம் பண்ணுகிற நேரத்தில் என்னிடம் உள்ள குறைகள் என்ன என்பதை நானே விசாரம் பண்ணிக் கொண்டிருந்தால் உபயோகமாக இருக்கும். அவரவர்கள் நிறைவை உண்டு பண்ணிக் கொள்ள வேண்டும் என்பதுதான் நம் மதம்.

# எல்லோருக்கும் நல்லவர்

திரு அண்ணாதுரை அவர்களின் நல்லாட்சிக்கு நிரூபணம் வேண்டுமாயின் காங்கிரஸின் பேச்சு மேடைகளில் பார்க்கலாம். 'அரசியலை விட்டுச் சங்கீதம் கேட்கப் போகிறேன்' என்று சங்கற்பம் செய்து கொண்டவர்களும், 'ஆறு மாதங்களுக்கு அரசியல் மேடையில் பேசப் போவதில்லை' என்று பிரதிக்ஞை செய்து கொண்டவர்களுங்கூட அவற்றைக் கைவிட்டு மீண்டும் அரசியலுக்கு வந்து வயிற்றெரிச்சலோடு பேசும்படி செய்து விட்டார் திரு அண்ணாதுரை. காங்கிரஸாட்சி நீங்கியதால் ஒரு குடியும் மூழ்கி விடவில்லை. மாறாக இப்போதுதான் விமோசனம் பிறக்கக் கதவு திறந்திருக்கிறது என்று ஒவ்வொரு குடிமகனும் நம்பிக்கை பெற்று வருகிறான். மக்கள் அரசாங்கத்திடம் கொள்ளும் நம்பிக்கையும், தங்களிடமே கொள்ளும் தன்னம்பிக்கையும்தான் நாட்டு முன்னேற்றத்தின் ஆதாரம் எனில் தமிழகம் முன்னேற இப்போது நல் வாய்ப்புக்கள் தோன்றியுள்ளன எனலாம்.

ஆயினும் தமிழகத்தின் வளர்ச்சி தமிழக அரசாங்கத்திடம் மட்டுமில்லை. மாநிலங்களின் மீது மத்திய சர்க்காரின் பிடி வெகு இறுக்கமாகவே உள்ளது. எனவே, அது தளருகிற வரையில் மாநிலங்கள் சுயமாக எதையும் சாதித்துவிட முடியாது. மத்திய அரசின் அதிகாரப் பிடியைத் தளர்த்த நமது முதல்வர் பாடுபடுவது குறிப்பிடத்தக்கது. அது ஒருபுறமிருக்க, தமக்குட்பட்ட எல்லைக்குள் திறமையுடன் செயலாற்றி வருவதே திரு அண்ணாதுரை அவர்களின் பெருமை.



முதலாவதாக, தமிழ் மொழியின் பெருமைக்கு நமது மாநில அரசு பல நல்ல நடவடிக்கைகள் எடுத்துள்ளது. இச்சமயத்தில் உலகத் தமிழ் மகாநாடும் சென்னையில் நடைபெற இருப்பது இப்பணிக்குத் தமிழ்த் தாய் கூறும் ஆசிபோல் அமைந்திருக்கிறது. தமிழ்ப் பற்றின் தீவிரத்தில் ஆங்கிலத்தின் அவசியத்தை இந்த அரசாங்கம் மறவாது என்று நம்பவும் இடம் உள்ளது.

இரண்டாவதாக, உணவுத் துறையில் மக்களின் துயர் நீக்க இயன்றதெல்லாம் செய்துள்ளது திரு அண்ணாதுரையின் அரசாங்கம். பல லட்சம் மக்களுக்கு ஒரு ரூபாய்க்குப் படியரிசி கிடைக்குமாறு செய்துள்ளது. அதைவிட முக்கியமாக, நிலத் தகராறுகளை உற்பத்தி செய்யும் கம்யூனிஸ்ட்களிடம் உஷாராக இருக்கக் கற்றுள்ளது.

நீண்ட தூர பஸ் போக்குவரத்தில் கட்டணக் குறைப்பு, அதிக ஊர்திகள் விடுவது முதலிய நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. பல இடங்களில் தனியாரும் தம்மைப் பின்பற்றுமாறு செய்துள்ளது.

முன்பு ஒரு முறை ராஜாஜி, பதவி வகிக்கும் ஒரு முதல் மந்திரியின் பிறந்ததினத்தில் அவருக்குப் பாராட்டு பெற்றுத் தருவது அவர் செய்யும் பணிகளே என்று கூறினார். அப்படியாயின் நமது முதல் மந்திரி இன்று அவரது பிறந்த தினத்தில் அப்பாராட்டைத் திண்ணமாகப் பெறுவார்.

திரு அண்ணாதுரையின் தனிச் சிறப்பு அவரது திறந்த உள்ளம்தான். அவர் எந்தக் கொள்கையையும் உடும்புப் பிடியாகப் பிடித்திருப்பதாகத் தோன்றவில்லை. சந்தர்ப்பத்தின் தேவை உணர்ந்து நாட்டுக்கு நல்லது செய்யக்கூடிய நடவடிக்கைகளை எடுப்பதே அவரது மதமாகத் தெரிகிறது. அவர் குருட்டுத்தனமாக எந்த ஒரு சாராரின் புறமும் நில்லாமல், எல்லோருக்கும் பொதுவாக நடுக்கண்ட நியாயம் வழங்குவார் என்று பொதுவாக நம்பிக்கை உள்ளது. ''இது தொழிலாளிகளின் அரசு'' என்று அவரது சகாக்கள் சிலர் சொன்னாலுங்கூட, திரு அண்ணாதுரையைப் பொறுத்தமட்டில் முதலீடு செய்வதும் சாஸனம் தருகிற— நாடு விரும்புகிற — ஒரு உரிமை என்பதை மதித்து, ''இது அனைவரின் அரசு'' என்ற குறிக்கோளை உடையவர் என்று நம்புகிறோம். முன்பு தேச நலனை உணர்ந்து கட்சியின் அடிப்படைக் கொள்கையான திராவிடப் பிரிவினையையே கைவிடும் திறம் படைத்த திரு அண்ணாதுரை, வறட்டு சோஷலிசக் கொள்கைகளையும் கைவிட்டு நாட்டின் பொருளாதார நலனுக்குகந்த பாதையை வகுக்க முடியும் என்று நம்புகிறோம். அந்த நம்பிக்கையே நாம் அவருக்கு அளிக்கும் பிறந்ததினப் பரிசாகும்.

# எண்பதும்

இவ்வொருவரும் சொந்தக் காரியங்களையே நினைக்கும் இவ்வுலகில், "யாருக்கு என்ன தேவை? நாட்டின் எந்தப் பகுதிக்கு எந்த உதவி தேவை?... கிளம்புங்கள்! நடந்து கொண்டே யோசிக்கலாம்" என்று கையை வீசிக் கொண்டு ஒரு நபர் வெய்யில் மழை பார்க்காமல் வீட்டை விட்டுக் கிளம்புகிறார் என்றால், அவர் ஓர் ஆச்சரிய புருஷர்தான். அதிலும் அவர் எண்பதாவது வயதை எட்டிக் கொண்டிருப்பவர் என்று தெரிந்துகொள்ளும்போது நம்முடைய குறைபாடுகள் நம் உள்ளத்துக்குள் விசுவரூபம் எடுத்து நம்மை வெட்கப்படும்படி செய்கின்றன. அவரைப் பார்த்து, நம் ஆற்றாமையால் பொறாமைப் படுகிறோம்!

இந்த எண்பது வயது இளைஞர் யார் தெரியுமா? மயிலாப்பூர் அகாடமியின் தலைவர் ஸ்ரீ டி. எஸ். ராமசுவாமி ஐயர்தான்! ஆடம்பரமற்ற சேவையும், விளம்பரம் தேடாத தொண்டும் இவரது லட்சியங்கள். வயதை மறந்து உற்சாகமாக நடப்பதும், வாய் நிறைய பெப்பர்மிண்டுகளைச் சுவைப்பதும், தம் அந்தஸ்தைப் பார்க்காமல் எல்லோருடனும் சரளமாகப் பழகுவதும் இவரை 'எங்கள் டி. எஸ். ஆர்.' என்று பழகியவர்களெல்லாம் உரிமையுடன் குறிப்பிட வைக்கின்றன.

சிறந்த பக்திமான். இவர் மனைவி மிகவும் சுகவீனமுற்றபோது, இவரிடம் ஸ்ரீ காமகோடி பெரியவாள் தாமாகவே அபிஷேக தீர்த்தத்தைக் கொடுத்து, 'ஆத்தில் அவளுக்குக் கொடு' என்று அனுப்ப, பிற்பாடு அந்த அம்மை விரைவில் குணமடைந்தாராம். இவர் அறியாமல் இவருக்கே ஒரு கண்டம் இருந்த சமயத்தில் இன்றைய ஸ்ரீ சிருங்கேரி பெரியவாளின் குருநாதர் இவரிடத்தில் சாளக்கிராமம் கொடுக்க, இவர் இடுப்பெலும்பு முறிவிலிருந்து அதிசயிக்கத்தக்க முறையில் நிவாரணம் பெற்றாராம். இப்படிப்பட்ட அநுக்கிரகங்களைப் பெற இவர் எப்படிப்பட்ட பக்திமானாக இருக்க வேண்டும்? ஆனால் அவரது பக்தி சேவையுடன் இணைந்தே நிற்கிறது. மயிலாப்பூரில் அவர் நிறுவியுள்ள சங்கர மடமும், நுங்கம்பாக்கத்தில் அவர் வெகு காலமாக நடத்தி வரும் ஹரிஜனப் பள்ளிக்கூடமும் அவரைப் பொறுத்தவரை சமமாகவே இருக்கின்றன.

மகாத்மா காந்தியும், தீனபந்து ஆண்ட்ரூஸும், ரவீந்திரநாத் தாகூரும் அவருடைய இல்லத்தில் வந்து அதிதிகளாய்த் தங்கியிருந்திருக்கிறார்கள் என்பதற்காக மட்டும் அவர் பெருமைப்பட்டுக் கொள்வதில்லை. 'பசி' என்று யார் வந்தாலும் அவர்களுக்கு அன்னமளிக்க வழிசெய்து மனம் நிறைவதில் அதிகப் பெருமைப்படுபவர் டி. எஸ். ஆர்.

இவர் மகா பெரிய சங்கோஜி. ஞாபக மறதியும் சற்று அதிகம். அதனால்தானோ என்னவோ தாம் செய்திருக்கும் சேவைகளைப் பற்றி அதிகம் நினைக்காமல், செய்ய வேண்டியிருப்பவைகளிடம் ஆர்வம் காட்டுகிறார். இப்போதுகூட பீகார் மக்களுக்கு நேரடி சேவை செய்ய ஓர் ஊழியர் குழு அமைத்துக் கொண்டிருக்கிறார். அவரே அந்தக் குழுவை இட்டுச் செல்லவும் ஆசைப்படுகிறார்.

ஜஸ்டிஸ் முத்துஸ்வாமி ஐயரின் பேரராகப் பிறந்து வழக்கறிஞராகவாழ்க்கைப்பாதையை அமைத்துக் கொண்டவர். எப்போதும் கட்சிக்காரர்கள் புடைசூழவும், கலகலவென்ற பண ஒலியைக் கேட்கவும் வாய்ப்புப் பெற்ற இவர், அதை உதறிவிட்டு, ஏழை எளியவர் புடைசூழ நீரோடையின் தெளிவோடு ஓடியாடிப் பொதுஜனத் தொண்டனாகத் தம்மை மாற்றிக் கொண்டது மற்றவர்கள் செய்த அதிர்ஷ்டம்தான்.

இன்று ஸ்ரீ டி. எஸ். ஆர். பங்கு பெறாத பொது ஸ்தாபனங்கள் சென்னை நகரில் இல்லை என்றே சொல்லலாம். கார்ப்பொரேஷனின் கடைசிப் பிரசிடெண்டாக (1931 வரை மேயர் பதவிக்கு அந்தப் பெயர்தான்!) இருந்து ஏழை மக்களுக்கு வீடு கட்டித் தரும் பணியைத் தொடங்கி வைத்தார்! இன்றுகூட நகரத்தில் தீவிபத்தால் வீடிழந்தோர்களுக்கு உதவி செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்! எந்தக் கூட்டத்துக்கு அழைக்கப்பட்டாலும் கௌரவம் பாராட்டாமலும், கால தாமதம் செய்யாமலும் கச்சிதமாக வந்து சேருபவர். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பதை வாழ்ந்து காட்டுபவர். அவருடைய சதாபிஷேகத்தைப்போல் நூறாவது பிறந்த தினத்தையும் கொண்டாடும் பாக்கியத்தை ஆண்டவன் நமக்கு அருள் புரிவானாக!

**—கோமதி ஸ்வாமிநாதன்**



# தொண்ணூறும்

ஒரு துறையில் புகழ் பெற்றுத் திகழ்பவரின் மகனுக்குப் பிறப்பால் சில நல்ல வாய்ப்புக்கள் கிட்டுமெனினும் ஒரு பிரச்னையும் கூடவே பிறந்து விடுகிறது. அவரது சொந்தச் சிறப்புக்களை விடுத்துத் தந்தையின் பெயரைக் குறிப்பிட்டு, 'இன்னாரின் மகன்' என்றே அழைப்பது வழக்கமல்லவா? புகழ் பெற்ற சரித்திரப் பேராசிரியர் கே. சுந்தரராமய்யரின் குமாரர் ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார் இளமையில் தந்தையின் புகழ் நிழலில் வளர்ந்த போதிலும் விரைவிலேயே சொந்த முயற்சியில் புகழ் தேடிக்கொண்டுவிட்டார். குடந்தை நேடிவ் ஹைஸ்கூலில் படித்து மெட்ரிகுலேஷன் முதல் வகுப்பில் தேறினார். அப்போது அவர் இடுப்பில் ஒரு வேஷ்டியும் ஒரு மேல் துண்டும் அணிந்து பள்ளிக்குச் செல்வாராம். சட்டை அணிந்துகொள்ளும் வழக்கம் பின்னர்தான் வந்தது. பி. ஏ.யில் மூன்று பாடங்களிலும் முதல் வகுப்பில் தேறியவர் இவர் ஒருவரே. ஆங்கிலத்தில் சென்னை ராஜதானியிலேயே முதன்மை இடம் பெற்றார்.

நாட்டின் விடுதலை நாளான ஆகஸ்ட் பதினைந்தாம் தேதிதான் இவர் பிறந்த தினமும். காந்தியடிகள், சுவாமி விவேகானந்தர், கவிக் குயில் சரோஜினி தேவி, கவியரசர் தாகூர் ஆகிய பெருமக்கள் பலருடன் நெருங்கிப் பழகும் பேறு பெற்றவர் சாஸ்திரியார். அன்பும் அடக்கமுமே உருவாகப் பொதுச் சேவையில் அரும் பணிகள் ஆற்றி வரும் இவரது 90வது பிறந்த நாள் விழா சென்னையில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. அவ்வமயம் தலைவர் ராஜாஜி ''பரீட்சையில் தேர்வு பெற்ற மாணவர்கள் பட்டியலில் முதல் பெயர் ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகளுடையதாக இருக்கும். என்னுடைய பெயர் கீழே ரிஜிஸ்டராரின் கையெழுத்துக்கு மேலே காணப்படும்'' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டிருந்தார். ''ஒரு நல்ல ஆன்மாவின் பிறந்த தினம்'' என்று மகிழ்ச்சியும் தெரிவித்திருந்தார்.

சட்டக் கல்வி பயின்று சுமார் ஐந்து ஆண்டுகள் பிரபல வக்கீல் பி. ஆர். சுந்தரய்யரிடம் 'ஜுனியர் ஆகப் பணியாற்றினார். அப்போது அர்பத்நாட் கம்பெனி என்ற பாங்க் நிறுவனம் மூழ்கியதன் விளைவாக இவரது தந்தையார் திரு சுந்தரராமையர் தம் வாழ்நாளில் சேமித்த முப்பதாயிரம் ரூபாயையும் இழக்க நேரிட்டது. வழக்கறிஞராக நல்ல முறையில் பணியாற்றி வந்த போதிலும், இந்தப் பெரு நஷ்டத்துக்கு ஓரளவு ஈடு செய்யும் வகையில் முன்சீப் பதவியை ஏற்க முன்வந்தார் திரு சாஸ்திரி. 26 ஆண்டுகள் பணியாற்றி, மாவட்ட நீதிபதி பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பின்பும் இலக்கிய சேவைக்கும் பொது வாழ்வுக்குமே தம்மை அர்ப்பணம்செய்துகொண்டார்.

நீதிபதியாகப் பணியாற்றியபோது இவரிடம் விசாரணைக்கு வந்த ஒரு சுவையான வழக்கு: எதிரிக்குத் தோசை வாங்கிக் கொடுத்த அரையணாவைத் திரும்பிப் பெற ஒருவர் ஆறணா ஸ்டாம்பு கட்டணம் செலவு செய்து வழக்குத் தொடுத்தாராம். இரு கட்சிக்காரர்களும் அப்பீலுக்கு மேல் அப்பீலாகப் போட்டி போட்டு வழக்காடினராம். ஏறக் குறைய இரண்டு வருடங்கள் நீடித்த இவ்வழக்கு இறுதியில் தள்ளுபடியாயிற்றாம்.

திரு சாஸ்திரியார் இதுவரை எழுதியுள்ள நூல்கள் 116. அவ்வப்போது பல்வேறு பத்திரிகைகளில் எழுதியுள்ள கட்டுரைகள் கணக்கற்றவை. இவர் சொற்பொழிவாற்றிய இலக்கிய — பொதுக் கூட்டங்கள் ஏழாயிரத்துக்கும் மேற்பட்டவை. 'பூர்ணாத்வைதம்' என்று இவர் 100 சுலோகங்கள் எழுதி காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத் குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளிடம் சமர்ப்பித்து அவர்களின் ஆசியையும் 'வித்யா பிரகாச' என்ற விருதையும் பெற்றார். சுவாமி சிவானந்த சரஸ்வதி 'ஞான பாஸ்கர' என்ற பட்டம் வழங்கியுள்ளார்.

படிப்பில் உள்ள ஆர்வம் டென்னிஸ் விளையாட்டிலும் இவருக்கு இருந்தது. முன்சீப், நீதிபதியாக இவர் பணியாற்றிய பல இடங்களில் டென்னிஸ் 'கோர்ட்' அமைக்கச் செய்திருக்கிறார். பதவி காலத்தில் பல ஊர்களில் கீதை வகுப்புக்கள் நடத்தி வந்திருக்கிறார். தம் சொந்த வேலைகளையெல்லாம் தாமே செய்து கொள்ளுவதில் இப்போதும் அவரது ஊக்கம் குன்றவில்லை. மூன்று வேளைகள் தவறாமல் குளிப்பதும், காலை மாலை நேரங்களில் சிறிது தூரம் நடப்பதும் ஒரு நாளும் தவறாது. காப்பி சாப்பிடுவதால் ஒருவித தீங்கும் ஏற்படவில்லை என்று உறுதியாகக் கூறுகிறார். குன்றா இளமையோடு திகழும் இப்பெரியவரின் வாழ்க்கை இளைஞருக்கு ஓர் உதாரணம்.

- ரா. பா.



# மேல்நாடு செல்லும் நால்வர்



அவர்களை இளம் வித்வான்கள் என்று சொல்ல முடியாது. அவர்களுடைய வய தோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் அவர்களின் சங்கீத வாழ்க்கைக் காலம் மிகவும் நீண்டது என்றே சொல்ல வேண்டும். முன்னணியில் இருப்பதற்குரிய சகல யோக்கியதாம்சங்களும் பெற்ற இந்நால்வர், அமெரிக்காவில் கன்னெக்டிகட்டிலுள்ள வெஸ்லியன் பல்கலைக் கழகத்தில் ஒன்பது மாதம் தங்கியிருந்து அந்நாட்டில் கர்நாடக சங்கீதத்தில் அவரவருடைய துறையைப் போதிக்கவும், கச்சேரிகள் செய்யவும் செல்கின்றனர்.

வாய்ப்பாட்டுக்கு ராமநாதபுரம் ஸ்ரீ கிருஷ்ணன் செல்கிறார். அழுத்தத்திலேயே மென்மை கலந்த அவரது குரலையும் இசை வழியையும் ரசிகர்கள் நன்கு அறிவர். கர்நாடக சங்கீதத்திலேயே உள்ள பற்பல மார்க்கங்களையும் கவனித்து, ஒவ்வொன்றிலும் தமக்குச் சிறப்பாகப் புலப்படும் அம்சங்களை எடுத்துத் திறம்பட வழங்கும் பெருமை ஸ்ரீ கிருஷ்ணனுக்கு உண்டு.

அமெரிக்கா செல்லும் வயலின் வித்வான் ஸ்ரீ வி. தியாகராஜன் அவர்கள், மிக உயர்ந்த சங்கீத பாணியைக் கொண்ட முதுபெரும் வித்வான் பாப்பா வெங்கடராமய்யா அவர்களின் புதல்வர். தந்தையிடமே பயின்று அவரது நாத வித்தையை நன்கு கிரகித்துள்ள திறமை அவருக்கு உண்டு.

வீணை தனம்மாளின் பேரரும், நாத வித்தகி ஜயம்மாளின் புதல்வரும், ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் சகோதரருமான மிருதங்கம் ஸ்ரீ டி. ரங்கநாதன் அவர்களும் அமெரிக்கா செல்லும் குழுவில் உள்ளார். கந்தப்ப பிள்ளை, பழநி முத்தையா பிள்ளை, பழநி சுப்பிரமணிய பிள்ளை ஆகிய மகா வித்வான்களிடம் பயிற்சி பெற்ற ஸ்ரீ ரங்கநாதனுக்குப் பாரம்பரியமாக வந்துள்ள இதய லயமும் கைகளில் பேசுகிறது.

அமெரிக்கா செல்லும் இசைக் குழுவை நிறைவிக்கிறார் ஸ்ரீ வி. நாகராஜன். இவரும் பாப்பா வெங்கடராமய்யாவின் புதல்வர். மிருதங்கம் கஞ்சிரா இரண்டிலும் தேர்ந்தவர். கஞ்சிராவில் அவரது நறுக்குத் தெறித்த சொற்கள் ரசிகர்களுக்கு விருந்தாகும்.

கடல் கடந்து நம் இசையைப் பரப்பச் செல்பவர்களுக்கு நல்வாழ்த்துகள்.




## ராதாகிருஷ்ணன் பிறந்ததினம்

முன்னாள் ராஷ்டிரபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்களின் 79வது பிறந்தநாள் விழா ஆசிரியர்கள் விழாவாகத் தேசமெங்கிலும் கொண்டாடப்படுகிறது. அன்று ஆசிரியர் சமுதாயத்துக்கு டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் விடுத்த செய்தியிலிருந்து பொருள் செறிந்த ஒரு வாக்கியத்தை நினைவுகூர்கிறோம்:

''ஒருவர் சிறந்த ஆசிரியராக விளங்க வேண்டுமானால் அவர் என்றும் மாணவராக — கற்கும் ஆவலுடையவராக — விளங்க வேண்டும். அவர் தமது மாணவத் தன்மையை இழந்தவுடனே அவர் நல்லாசிரியராக வளர்வதும் நின்றுபோகிறது !''

ஸ்ரீ ராதாகிருஷ்ணன் அவர்கள் பிறந்த தினத்தையொட்டி தபால் தலை வெளியிட்டு அவருக்கு மரியாதை செலுத்திய பாரத சர்க்கார் பாராட்டுக்குரியது.

# உடனடி நிவாரணம்!

## அஜீரணத்திலிருந்து நீங்களும் உங்கள் குடும்பத்தினரும் விடுதலை பெற







இனிமையான சுவையுள்ள பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னிஷியா சில விநாடிகளில் "உடனடி" நிவாரணமளிக்கிறது. ஏனெனில் அவை பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னிஷியாவினுடைய பூரண சாரத்தையும் கொண்டது. ஒவ்வொரு மாத்திரையும் தன்னுடைய எடைக்கு 189 மடங்கு எடையுள்ள வயிற்றுப் புளிப்பை அகற்றுகிறது.

இப்பொழுது மெல்லிய தகடுகளில் 10 மாத்திரைகளாகவும் 4 மாத்திரைகளாகவும் கிடைக்கிறது. குடும்பத் தேவைகளுக்கு சிக்கனமான முறையில் 75 மற்றும் 150 மாத்திரைகள் கொண்ட பாட்டில்களில் தயாராகக் கிடைக்கும்.

இன்றே வாங்குங்கள், எப்பொழுதும் பிலிப்ஸ் மாத்திரைகள் கைவசம் வைத்திருங்கள். வயிற்றில் கோளாறு ஏற்படும் போது சில மாத்திரைகளை சுவைத்து "உடனடி" நிவாரணம் பெறுங்கள்.

# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா டாபிலெட்

மான்யுபாக்சரர்: ரிஜிஸ்டர்ட் யூஸர்
டெய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்)
பிரைவேட் லிமிடெட்,
62, புண்டல் ரோட், கல்கத்தா-19



# புதிய திட்டக் கமிஷன்

## க. சந்தானம்

புதிய திட்டக் கமிஷன் சாவகாசமாக உருவாகி யிருக்கிறது. அதனால் ஒன்றும் நஷ்டமில்லை. இரண்டு வருஷங்களுக்கு ஒருவரையும் நியமிக்காமல் நிறுத்தி வைத்திருந்தால்கூட நலமாக இருந்திருக்கும். நாட்டில் உணவுநெருக்கடி நீங்கி, பொருளாதார மந்தம் முடிவு பெறும் வரையில் பெரும் புதிய திட்டங்கள் சாத்தியப்படமாட்டா. இதுவரையில் அமைக்கப்பட்ட தொழிற்சாலைகளும், மின்சார நிலையங்களும் மற்ற ஸ்தாபனங்களும் சரிவர இயங்குவதற்கு முயற்சி செய்வதே தற்போதைய முக்கிய அலுவலாகும். ஆனால் திட்டக் கமிஷனில் பணிபுரியும் ஊழியர்களின் எண்ணிக்கையையும் மொத்தச் செலவையும் குறைப்பதற்காகவாவது அது இயங்க வேண்டும். திரு காட்கில் உப தலைவராகவும், திரு வேங்கடராமன், திரு வேங்கடப்பய்யா, திரு பீதாம்பர் பந்த், டாக்டர் நாக் சௌத்ரி அங்கத்தினர்களாகவும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். புதிய திட்டக் கமிஷன் பழைய திட்டக் கமிஷனுடைய தவறான கொள்கைகளே தற்போதைய பொருளாதார நெருக்கடிக்குக் காரணம் என்று உணர்ந்து புதிய முறைகளை மேற்கொள்ளுமா என்பதே கேள்வி.

நிர்வாகச் சீர்திருத்தக் கமிஷன் திட்டக் கமிஷனைச் சீர்திருத்தி அமைக்கச் சில சிபாரிசுகள் செய்திருந்தது. ஓர் ஆலோசனைக் குழுவாகவே திட்டக் கமிஷன் பணியாற்ற வேண்டும் என்பதும் அதற்கு எவ்வித நிர்வாக அதிகாரமோ, திட்டங்கள் மானியங்களை முடிவாக ஆமோதிக்கும் உரிமையோ இருக்கலாகாது என்பதும் அதன் முக்கிய சிபாரிசு. இதை மத்திய மந்திரி சபை ஏற்றுக்கொண்டதாக அறிந்தோம். ஆனால் பிரதம மந்திரியோ மற்ற மத்திய மந்திரிகளோ திட்டக் கமிஷன் அங்கத்தினராக இருக்கலாகாதென்ற சிபாரிசு நிராகரிக்கப்பட்டது. முதலில் திட்டக் கமிஷனும் ஓர் ஆலோசனைக் குழுவாகவேதான் உருவாகியது. அதற்குச் சட்டபூர்வமாக எவ்வித அதிகாரமும் இல்லை. ஆனால் பிரதம மந்திரி அதன் தலைவராக இருந்ததால் அது மத்திய மந்திரி சபைக்குப் போட்டியாக அதிகாரம் படைத்த குழுவாகி விட்டது. பிரதம மந்திரி திட்டக்கமிஷனில் திட்டங்களை ஆதரித்து விட்டுப் பின்னர் தனது மந்திரி சபையின் ஆலோசனைப்படி அவைகளை நிராகரிப்பது நடைமுறையில் சாத்தியமில்லை. எக்கமிட்டியிலும் தலைவருக்கு மிகப் பிடித்தமான காரியங்களைப் பெரும்பாலான அங்கத்தினர்கள் ஆதரிப்பது சகஜம். பிரதம மந்திரியைத் தலைவராகக் கொண்ட எந்தத் திட்டக் கமிஷனுக்கும் பொருளாதார நலத்தையே சிந்தித்துத் திட்டமிடும் சுதந்திரம் இருக்க முடியாது. ஸ்ரீமதி இந்திரா காந்திக்குத் தனது தந்தையைப் போல் பல துறைகளில் பற்றோ பிடிவாதமோ இருப்பதாகத் தெரியவில்லை. ஆதலால் புதிய உபதலைவரின் சிந்தனைகளுக்கு அதிக வாய்ப்பிருக்கும் என்று வாதிக்கலாம். ஆனால் பல இடங்களிலிருந்து பலவித யோசனைகளும் நிர்ப்பந்தங்களும் பிரதம மந்திரியை ஓயாமல் தொந்தரவு செய்து கொண்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

நிதி மந்திரி திட்டக் கமிஷன் அங்கத்தினராக இருப்பதாலும் அதன் போக்குப் பாதிக்கப்படும். வரி மூலம் எவ்வளவு தொகை கிடைக்கும், வெளிநாட்டுக் கடன்கள் வாயிலாக எவ்வளவு முதல் சேகரிக்கலாம் என்பதைப் பற்றித் தமது இலாகாவின் பொறுப்புள்ள அதிகாரிகள் மூலம் மதிப்பிடுவது நிதிமந்திரியின் கடமையாகும். திட்டக் கமிஷனோ தனது திட்டங்களுக்குத் தேவையான தொகைகளை எப்படியாவது திரட்டி விடலாம் என்ற நம்பிக்கையைக் கொண்டே திட்டங்களை வகுக்கும். திட்டக் கமிஷன் அங்கத்தினராகவிருந்து, நாட்டின் முன்னேற்றத்துக்கு அவசியமான நிதியைத் திரட்ட முடியாது என்று கூறும் நிதி மந்திரி தனது பதவிக்குத் தகுதி பெற்றவரல்ல என்றே பிரதமருக்கும் மற்ற மந்திரிகளுக்கும் பார்லிமென்டுக்கும் தோன்றும். திட்டக் கமிஷனில் ஒரு பெரும் தொகை சாத்தியமென்று கூறிவிட்டு நிதிமந்திரி என்ற ஹோதாவில் வேண்டிய வரிகளை விதிக்க மறுப்பதும், தேவையானால் காகித நாணயத்தைப் பெருக்க விரும்பாமலிருப்பதும் சாத்தியமில்லை.

இக்காரணங்களால் புதிய கமிஷன் புதிய முறைகளைத் தைரியத்துடன் வகுக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆயினும், அது அப்படிச் செய்ய விரும்பினால், என்ன கொள்கை

களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று சிந்திப்பதால் நன்மை உண்டாகலாம்.

இல்லாத பணத்தை, நிச்சயமாகக் கிடைக்க முடியாத மூலதனத்தைக் கொண்டு இனி முடிவான திட்டம் வகுக்கலாகாது. முன் காலத்தில் நாணயங்கள் மூலமாகவே பண விவகாரங்கள் நடைபெற்ற பொழுது, அரசாங்கங்கள் கூட வரியாகவோ, கடனாகவோ பணம் வசூல் செய்த பிறகே செலவழிக்க முடிந்தது. இப்பொழுதோ காகிதப் பணத்தைப் பெருக்கியும், பாங்கிகள் மூலம் செலாவணியை அதிகரித்தும் இல்லாத பணத்தை அரசாங்கங்களும், ஓரளவு முதலாளிகளும் செலவழிப்பது சாத்தியமாகிறது. இவ்வாறு போலிப் பணப் பெருக்கத்தை நம்பித் திட்டம் வரையலாகாது.

இரண்டாவதாக, திட்டங்களை விரிவாக வரைவதும், ஆமோதிக்கப்பட்ட பின் அமுல் செய்வதும் மத்திய, ராஜ்ய அரசாங்கங்களின் அந்தந்த இலாக்காக்களின் பொறுப்பாக இருக்க வேண்டும். அவைகளைத் தனது நிபுணர்களைக் கொண்டு பரிசீலனை செய்வதும் மதிப்பீடுகளை முடிவு செய்வதும் வீண் வேலை மட்டுமின்றி அரசாங்கங்களின் பொறுப்புக்களைக் குறைப்பதாகும்.

சில துறைகளில் திடமான குறிக்கோள்களை வைத்துத் திட்டமிடுவது சாத்தியம். எஃகு, சிமிண்டு, மின்சார உற்பத்தி முதலியவைகளுக்குப் போதிய பணமும் யந்திரங்களும் நிபுணர்களுமே தேவை. ஆதலால் அடுத்த ஐந்தாண்டுகளில் எவ்வளவு உற்பத்தி தேவை என்று நிர்ணயித்து அதற்குத் திட்டமிடலாம். ஆனால் உணவு உற்பத்தி, கல்வி, சுகாதாரம் போன்ற வேறு பல துறைகளில் பொது மக்களின் ஒத்துழைப்பும், மழை முதலிய இயற்கை வசதிகளும் அவசியம். வெறும் பணத்தால் குறிப்பிட்ட சாதனைகளை அடைய முடியாது.

திட்டக் கமிஷனின் பணி என்ன? அரசாங்க இலாகாக்களில் ஒவ்வொன்றும் தான் முன்னேற வேண்டும் என்பதில் நாட்டின் பொருளாதார நிலைமையைக் கவனிக்காமல் தன் திட்டத்தை வற்புறுத்துவது சுபாவம். மத்திய, ராஜ்ய மந்திரி சபைகளுக்கு அவற்றின் தராதரங்களை நடு நிலைமையில் நின்று ஆராய ஆற்றலுமில்லை, அவகாசமும் இல்லை. இவற்றை நன்கு ஆலோசித்து முக்கியமானவற்றைப் பொறுக்கி அவசியக் கிரமத்தில் தொகுப்பதே திட்டக் கமிஷன் செய்யக் கூடியது. இதர காரியங்கள் அனைத்தும் அதன் பணிக்குப் புறம்பானவை.

இப்பணியை நன்கு செய்ய வேண்டுமாயின் கமிஷன் காரியாலயத்தில் இருபது ஆண்டுகளாக வளர்ந்திருக்கும் பிரிவுகளும், பணியாளர்களும் கணிசமாகக் குறைக்கப்பட வேண்டும். என் அபிப்பிராயத்தில் திட்டக் கமிஷன் சிப்பந்திகளில் நாலில் ஒரு பங்கை வைத்துக் கொண்டு, மீதி மூன்று பங்கு சிப்பந்திகளை நீக்கிவிட்டால் கமிஷனின் பிரத்தியேகப் பணி நான்கு மடங்கு திறமையுடன் நடைபெறக் கூடும். உப தலைவர் திரு காட்கில் நமது அனுதாபத்துக்குரியவர். உபயோகமில்லாத மாளிகைகளையும், வேலையில்லாத ஊழியர்களையும், சுமக்கமுடியாத கடன்களையும், பிதுரார்ஜிதமாகப் பெற்ற மைனர் ஜமீந்தார் நிலைமையில் இருக்கிறார். சுமைகளைக் களைந்து, பொறுப்புக்களைக் குறைத்து நிலைமையைச் சீர்திருத்தினால் நாட்டுக்கு நல்ல சேவை புரியக்கூடும். அதற்கு அறிவு மட்டும் போதாது. திடசித்தமும் தைரியமும் வேண்டும். அரசாங்கத்திடமிருந்து போதிய ஒத்துழைப்பு இல்லாவிட்டால் உடனே ராஜிநாமாச் செய்யும் உறுதியும் வேண்டும். இல்லாவிடில் அவருக்கு முன்னிருந்த திரு அசோக் மேதாவைப் போல் பண்டிதர் தோரணையில் பிரசங்கம் செய்துவிட்டு நாட்டின் பொருளாதாரத்தை விதியின் போக்குக்கு விட்டுவிட வேண்டி வரும்.

**மாதர் அறத்தின் மாட்சி**

''காதல் ஒருவனைக் கைப்பிடித்தே, அவன்
காரியம் யாவினும் கைகொடுத்து
மாதர் அறங்கள் பழைமையைக் காட்டிலும்
மாட்சி பெறச் செய்து வாழ்வமடி!''

இந்த வரிகளில், கவிஞர் பெருமான் பாரதிக்குப் பழைமையில் இருக்கும் நம்பிக்கையும், ஆர்வமும் நன்கு வெளிப்படுகின்றன.

இந்த இதழ் ''கல்கி''யின் அட்டைப் படத்தில் காட்சிதரும் தம்பதியர் புதுமை நோக்குடன் லட்சியக் கருத்தும் கொண்டவர்களென்பது நன்கு விளங்குகிறது. கைப்பிடித்த நாயகனின் காரியங்களிலும் கைகொடுத்து இந்தக் காரிகை அவன் சட்டைப் பொத்தானை எத்தனை ஆர்வத்துடன் தைக்கிறாள்! இந்த எழில் ஓவியத்தைத் தீட்டியவர் ஓவியர் உபால்டு.

# பரபரப்பூட்டும் செய்தி!

# பை அளிக்கும் புதுமை!

## இரு பயன்கள் இணைந்த, எடுத்துச் செல்ல வசதியான பை ட்ரான்ஸிஸ்டர் மாடல் 3401

**வீட்டிற்குள்**
சக்தி வாய்ந்த மெயின்ஸ் செட்டாக உபயோகிக்கலாம்! மின்சக்தியில் இயங்குகிறது!



**வெளியே**
இந்த ட்ரான்ஸிஸ்டர் கையில் எடுத்துச் செல்ல லாகவமானது! பாட்டரியில் இயங்குகிறது!



## மேலும் இந்த வசதியான அம்சங்களையெல்லாம் கொண்டது:

ரெக்கார்ட ப்ளேயருக்கான இணைப்பு! உங்களுக்குப் பிடித்தமான ரெக்கார்டுகளையெல்லாம் கேட்டு இன்னிசை யமுதில் திளைத்து மகிழலாம்!



டேப் ரெக்கார்டருக்கான இணைப்பு! உங்களுக்குப் பிரியமான ரேடியோ நிகழ்ச்சிகளையெல்லாம் பதிவுசெய்து கொள்ளலாம்!



இத்தனைக்கும், இதற்கு மேலும்

**விலை ரூ. 541/-* தான்** மாடல் 3401 13 ட்ரான்ஸிஸ்டர்ஸ்-டயோடுகள்- 4 பாண்டுகள்- தொடர்ச்சியான தொனிக் கட்டுப்பாடு. ஃபைன் ட்யூனிங் டிவைஸ். ஃபெர்ரைட் மற்றும் எக்ஸ்ட்ரா லார்ஜ் டெலெஸ்கோபிக் ஏரியல்கள்- மரக் காபினெட்- அதிகப்படி ஒலிபெருக்கி மற்றும் தனி இயர்ஃபோனுக்கான இணைப்பு.

* (எக்சைஸ் வரி அடங்கியது) விற்பனைவரி தனி

**ஆயுட்கால மளவும் ஆனந்த மளிக்கும் உறுதுணை— பை!**




பை ரேடியோக்கள் மற்றும் ட்ரான்ஸிஸ்டர்கள்

ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்ஸஸ் லிமிடெட்
பை ரேடியோ டிவிஷன்
பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • டெல்லி
பெங்களூர் • செகந்திராபாத் • பாட்னா

Shilpi GRA 49A/67 Tam

## அத்தியாயம் 7

# யாரோ இவர் யாரோ?

சின்னதுரையிடம் பேசிவிட்டு மாடிப்படியேறித் தன் அறையை நோக்கி ரவி வந்து கொண்டிருப்பதைச் சித்ரா கவனித்தாள். உடனே அவனைக் கவனிக்காததுபோல் கையில் ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு படிப்பதாகப் பாவனை செய்யலானாள்.

ரவி அவள் அறையினுள் காலெடுத்து வைத்தான். ''உள்ளே வரலாமா?'' என்று கேட்டான் ரவி, அவளிடம்.

''உம்!''

உள்ளே வந்து, ''குட்மார்னிங், மிஸ் சித்ரா!'' என்றான் ரவி.

''சரி! வந்த விஷயத்தை முதலில் சொல்லுங்க.''

ரவி பேசாமல் இருந்தான்.

''சித்ரா! என்ன பேசாமல் பார்த்துக்கிட்டே இருக்கீங்க?''

''கண்ணோடு கண் நோக்கின் வாய்ச்சொற்கிடமேது? உங்க பார்வையைப் பார்த்தாலே எனக்குப் பயமாயிருக்குது. நான் எப்படிப் பேசறது?''

''மிஸ்டர் ரவி! நானே உங்ககிட்டே கேட்டுக்கிறேன் சார். தயவுசெய்து நீங்கள் இனிமேல் எங்கப்பாவைப் பார்க்காதீங்க!''

''சேச்சே! சும்மா வந்து உங்களையே பார்த்துக்கிட்டிருந்தால் அவர் என்ன நினைப்பாரு?''

''நீங்க என்னை வந்து பார்க்கணும்னு நான் சொல்லலை. எங்க வீட்டுப் பக்கமே வராதீங்கன்னு தான் நான் சொல்றேன்!''

''எங்கிட்டே ஏன் இவ்வளவு அன்பாப் பேசறீங்கன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

''எங்கப்பா ஏற்கனவே குதிரைப் பைத்தியம் பிடிச்சு அலையறார். நீங்க கரெக்டா 'டிப்ஸ்' கொடுத்து அந்தக் குதிரையும் ஜெயிச்சுடுச்சு. இனிமேல் உங்க சிநேகம் இருந்தால் அப்பாவுக்குப் பைத்தியம் தலைக்கேறிவிடும். அதனாலே தயவுசெய்து இனிமேல் இந்தப்பக்கம் வராதீங்க!''

''மிஸ் சித்ரா! நீங்க என்னை ரொம்பத் தவறா நினைச்சுக்கிட்டீங்க. உங்கப்பா குதிரைப் பந்தயத்துக்குப் போகிறதை நிறுத்தாமல் விடறதில்லைன்னு நான் தீவிரமா ஒரு சபதம் எடுத்துக்கிட்டிருக்கேன்!''

''ஏன் ஸார், இப்படிப் பொய் பேசறீங்க?''

''சத்தியமா சொல்றேன். உங்கப்பா குதிரைப் பந்தயத்துக்குப் போகிறதை நிறுத்தாட்டி என் பேரை மாத்தி வைச்சுக்கிறேன்!''

''ஏன், ரவி என்கிற பேர் உங்களுக்குப் பிடிக்கலையா?''

''நான் சொல்றதை இப்ப நம்பமாட்டீங்க. உங்க அப்பா குதிரைப் பந்தயத்துக்குப் போகிறதை நான் நிறுத்தினால் எனக்கு என்ன தருவீங்க?''

''நீங்க மட்டும் அந்த மாதிரி செய்தால் எதைக் கேட்டாலும் தருவேன்.''



'சோ'

''உங்களைத்தான் பரிசாகக் கேட்கப் போறேன்'' என்று ரவி சொல்லவில்லை; நினைத்துக் கொண்டான்.

''என்ன யோசிக்கிறீங்க?'' என்று கேட்டாள் சித்ரா.

''இந்தச் சமயத்திலே எந்தப் புத்திசாலியாக இருந்தாலும் என்ன நினைப்பாரோ அதைத்தான் நினைச்சேன்.''

''அதிருக்கட்டும், மிஸ்டர் ரவி! எங்கப்பா குதிரைப் பந்தயம் போகிறதை நிறுத்துகிறதாயிருந்தால், எதுக்காக அவருக்குச் சரியான 'டிப்ஸ்' குடுத்தீங்க?''

''நான் சொல்கிறேன். ஆனால் நீங்க தப்பாக நினைக்காதீங்க.....'' என்று ஆரம்பித்து, ரவி, சின்னதுரைக்குச் சனீசுவரன் என்று தான் கூறியது எந்தக் காரணத்தினால், எப்படி அது தற்செயலாக நேரிட்டது என்பதை விளக்கிக் கூறினான்.

''உங்கப்பாவைக் கோவத்திலே சனீசுவரன்னு திட்டினேன்.. 'அவ்வளவுதான்!'' என்று முடித்தான் ரவி.

''நீங்க சொல்கிறது உண்மையா?''

''எது? உங்கப்பா உண்மையாகவே சனீசுவரனுன்னு கேட்கிறீங்களா?''

''அதில்லே, இப்ப நீங்க சொன்னதெல்லாம் உண்மையான்னு கேட்டேன்!''

''உங்களுக்கு ஹரிச்சந்திரனைத் தெரியுமா?''

''தெரியாது!''

''என்னைத் தெரிஞ்சுக்குங்க. அது ஹரிச்சந்திரனைத் தெரிஞ்சு



கிட்டமாதிரிதான். நான் வாயைத்திறந்தால் உண்மை முத்துமுத்தாக உதிரும்!''

''ஆல்ரைட்! என்னுலே எங்கப்பா குதிரைப் பந்தயத்தை நிறுத்த முடியலே. நீங்க செய்து காட்டநீங்களான்னு பார்க்கிறேன்.''

''அதுக்கு உங்க உதவி வேணும். உங்கப்பாவை நாம அடிக்கடி குதிரைப் பந்தயத்துக்கு அழைத்துக் கொண்டு போகணும்! நான் குருட்டுத்தனமா டிப்ஸ் குடுக்கிறேன். தொடர்ச்சியாகப் பணத்தை நிறைய கோட்டை விட்டால் அவர் மனம் மாறிவிடும்!''

''சரி, பார்க்கலாம்!''

''இப்ப எனக்கு நீங்க ஓர் உபகாரம் பண்ணணும், உங்கப்பாவை இன்னிக்கு நீங்களே குதிரைப் பந்தயத்துக்குக் கூப்பிடணும்.''

''ஏன்?''

''அப்பத்தான் அவருக்கு நம்ம பேரிலே எந்தச் சந்தேகமும் வராது.''

சித்ரா சற்று யோசித்து, ''சரி'' என்றாள்.

சின்னதுரையிடம் சவால் விட்ட மாதிரியே, சித்ராவையே அவரைக் குதிரைப் பந்தயத்துக்குக் கூப்பிட வைத்துவிட்ட திருப்தியோடு ரவி, சித்ராவை அழைத்துக் கொண்டு கீழே ஹாலுக்கு வந்தான்.

சின்னதுரையிடம் சித்ரா சென்று, ''அப்பா! இன்னிக்குக் குதிரைப் பந்தயத்துக்குப் போக நேரம் ஆகலே? வாங்களேன், போகலாம்'' என்றவுடன் சின்னதுரை மூக்கின்மேல் விரலை வைத்தார். ஆச்சரியத்தினுல் அல்ல; அவர் மூக்கின்மேல் அப்போது ஓர் ஈ உட்கார்ந்ததே காரணம்.

''என்னம்மா இது? நீயே என்னைக் குதிரைப் பந்தயத்துக்குக் கூப்பிடறே! ஆச்சரியமா இருக்குது!'' என்றார் சின்னதுரை.

சின்னதுரை ஆச்சரியப்பட்டார் என்பதை அவர் சொன்ன பிறகுதான் ரவி புரிந்து கொண்டான். கோபம், வருத்தம், மகிழ்ச்சி, ஆச்சரியம் எல்லாம் ஒரேவிதமாகத்தான் அவர் திரு



முகத்தில் பிரதிபலித்தன. சதா குதிரை ஞாபகமாகவே இருந்ததாலோ என்னவோ ஒரு குதிரையின் முகம் எவ்வளவு உணர்ச்சி மயமாக இருக்குமோ அந்த அளவே அவர் முகமும் இருந்தது. சின்னதுரையை ரவி சொன்னபடி குதிரைப் பந்தயத்துக்கு அழைத்துவிட்டு, செய்யக் கூடாத காரியத்தைச் செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டதை எண்ணி வருத்தப்பட்டவாறே சித்ரா போர்ட்டிகோவில் நின்று கொண்டிருந்த காரை நோக்கிச் சென்றாள்.

சின்னதுரை ஒருமுறை ரவியைப் பார்த்தார். ரவி அவர் எதற்காக அப்படிப் பார்க்கிறார் என்று புரியாமல் தவித்தான். சின்னதுரை அவன் தோளில் கை வைத்து ஒரு 'ஷொட்டு' கொடுத்தார். ''ரவி ! உன்னைப் பார்த்தால் எனக்கு ரொம்ப வியப்பாக இருக்கு அப்பா!'' என்றார் சின்னதுரை.

''ஸார்! அப்பப்ப நீங்க என்ன நினைக்கிறீங்கன்றதை வாயாலே சொல்லிடுங்க. உங்க முகத்தைப் பார்த்தால் ஒண்ணும் புரிய மாட்டேங்கிறது.''

அவன் முகத்தைப் பார்த்தார் சின்னதுரை. ''அப்படிச் சும்மா பார்க்காதீங்க, ஸார் ! நினைக்கிறதைச் சொல்லிடுங்க'' என்று ரவி கெஞ்சினான்.

''எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்குது.''

''அதுக்கா முகத்தை அப்படி வெச்சுக்கிட்டீங்க ?''

''ரவி ! நீ பெரிய ஆள்! என் மகள் சித்ராவை ஒரே நிமிஷத்திலே மாத்திட்டியே ! அவள் என்னைக் குதிரைப் பந்தயத்துக்குக் கூப்பிடறது இதுதான் முதல் தடவை ! ரவி இதையே இவ்வளவு சுலபத்திலே சாதிச்ச நீ எந்தக் காரியத்தையும் செய்து முடிச்சுடுவே. யாரோ ஒரு முரடனை முட்டாளாக்கப் போகிறதாச் சொன்னியே. அவன் நிச்சயம் முட்டாளாகத்தான் போகிறான்!''

''ரொம்ப நன்றி ஸார் ! நீங்க சொன்னதை அந்த முரடனே சொன்ன மாதிரி நினைச்சு நான் சந்தோஷப்படறேன். குதிரைப் பந்தயத்துக்குப் போக நேரம் ஆகிறது. போகலாமா?''

வீட்டை விட்டுப் புறப்பட்ட சின்னதுரையின் கார் குதிரைப் பந்தய மைதானத்துக்கு வந்து நின்றது. காரிலிருந்து இறங்கி அவர்கள் உள்ளே போகும்போது முதல் பந்தயம் ஆரம்பிக்கச் சிறிது நேரமே இருந்தது. சின்னதுரை ரவியிடம் ''சீக்கிரம். டிப்ஸ் குடு. பந்தயம் ஆரம்பிச்சுடப் போகுது. போய்ப் பணத்தைக் கட்ட வேணும்'' என்றார் அவசரமாக.

ரவி கடவுளை வேண்டிக் கொண்டான். ''சனீசுவரா! நான் கொடுக்கும் நம்பர் தோற்க வேண்டுமே! அதற்கு ஒரு வழி காட்டு, ஆண்டவனே !'' என்று கண்ணை மூடிக் கண நேரம் தியானத்தில் அமர்ந்தான். கண்ணைத் திறந்தபொழுது அவன் கண்களில் முதலில் சித்ராவின் தலைப் பின்னல்தான் தென்பட்டது. உடனே பளீரென்று ஒரு யோசனை தோன்ற அந்தத் தலைப் பின்னலில் இருந்த பின்னல் முடிச்சுக்களை வேகமாக எண்ணினான். ரிப்பன் வரையில் ஒன்பது தேறியது. உடனே சின்னதுரையிடம் ''ஸார் ! ஒன்பதாம் நம்பர் குதிரையிலே கட்டுங்க'' என்றான்.

சின்னதுரை பணம் கட்டக் காற்றாய்ப் பறந்தார். சித்ரா, ''மிஸ்டர் ரவி! என்ன கணக்கிலே அப்படி ஒன்பதுன்னு சொன்னீங்க?'' என்று கேட்க, ரவி, தான் நம்பர் கண்டுபிடித்த பின்னல் ரகசியத்தைக் கூறி விடலாமா என்று ஒரு கணம் சிந்தித்தான். 'வேண்டாம்' என்று முடிவு செய்து, ''சித்ரா! நீங்க வேணும்னாப் பாருங்க. அந்தக் குதிரை நிச்சயம் தோற்கும். நான் என்ன கணக்கிலே சொன்னேன்னு அப்புறம் சொல்றேன் !'' என்றான்.

''கண்மூடித்தனமாத்தானே நம்பர் கொடுத்திருக்கீங்க?''

''ஒரு திட்டம் போட்டே கொடுத்திருக்கிறேன். பேசாமல் இருங்க.''

இதற்குள் சின்னதுரையும் வந்து அவர்களிடம் சேர்ந்துகொண்டார்.

குதிரைப் பந்தயத்தில் பலவிதமான பிரகிருதிகளைப் பார்க்கலாம். அன்று ஒரு குறிப்பிட்ட நபர் நிலைகொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தார். தான் பணம் கட்டிய குதிரை ஜயிக்குமோ, ஜயிக்காதோ என்ற கவலை மனத்தில் பாய்ந்தோட அவருடைய கைகள் விளையாடிக் கொண்டிருந்தன. அவர் தமக்கு முன்னால் நின்று கொண்டிருந்தவருடைய மேல்துண்டில் இருந்த நூல்களைத் தம்மையறியாமலே பிய்த்துப் போட்டுக் கொண்டிருந்தார். பந்தயம் ஆரம்பிக்கும் சமயத்தில் இவருடைய திருவிளையாடலினால் முன்னால் நின்று கொண்டிருந்தவருடைய மேல் துண்டு சிறு சிறு நூல்களாகப் பிய்க்கப்பட்டுத் தரையிலே கிடந்தது.

''கம் ஆன்! கம் ஆன்!'' என்று பல குரல்கள் கத்தின. தங்கள் சொந்த மகன் முன்னுக்கு வருவதில் கூட அக்கறை காட்டாத பெரிய மனிதர்கள் பலர் தங்கள் குதிரை முன்னால் வரத் துடியாகத் துடித்தபடி நின்றனர்.

பல குடும்பங்களைப் பாழாக்குகிறோம் என்ற நினைப்பே இல்லாமல் பல குதிரைகள் பின்தங்க, ஒன்பதாம் நம்பர் குதிரை பாய்ந்தோடிக் கொண்டிருந்தது. சின்னதுரை ''கம் ஆன்! கம் ஆன்!'' என்று கூவிக்கொண்டிருந்தார். விரல்களால் விளையாடிக் கொண்டிருந்த நபர் தமது குதிரை ஜயிக்காது என்று தெரிந்துகொண்டு விரல்களின் விளையாட்டை நிறுத்தினார். ஒன்பதாம் நம்பர் வெற்றியடைந்தது. அதன்மேல் பணம் கட்டியவர்கள் சின்னதுரை உட்பட, பணம் வாங்கப் பாய்ந்தோடினர். குதிரைக்குப் பதில் இவர்கள் ஓடியிருந்தாலே ஜெயித்திருக்கலாம் போலிருந்தது அந்த ஓட்டம்.

சித்ரா கோபத்தோடு ரவியைப் பார்த்தாள். ''இதான் நீங்க தப்பா டிப்ஸ் கொடுக்கிற லக்ஷணமா?''

''என்னை மன்னிச்சுடுங்க சித்ரா. இந்தத் தரித்திரம் பிடிச்ச குதிரை ஜெயிக்கும்னு நான் நினைக்கவே இல்லே!''

''நீங்களேதான் முதல்லேயே சொன்னீங்களே. திட்டம் போட்டுத்தான் டிப்ஸ் குடுத்திருக்கிறேன்னு.''

''நான் சொல்றதை நம்பணும். நான் எப்படித் தெரியுமா ஒன்பதாம் நம்பர் குதிரைன்னு சொன்னேன்?''

''எப்படி?''

''உங்க பின்னலிலே இருக்கிற முடிச்சுக்களை எண்ணினேன். ஒன்பது இருந்தது. கடவுள் மேலே பாரத்தைப் போட்டுவிட்டு உங்க பின்னல் மேலே கணக்கைப் போட்டு, ஒன்பதுன்னு சொன்னேன்.''

சித்ரா பதில் பேசாமல் அவன் சொல்வது உண்மையா, இல்லையா என்று பார்க்க நினைத்துத் தன் கழுத்தை ஒரு வெட்டு வெட்டித் தனது கூந்தலை முன் பக்கம் தள்ளினாள். ஒரு முடிச்சோ பின்னலோ இல்லாமல் கேசம் விரிந்து கிடந்தது, மதுரை மாநகரைத் தீயிடப் புறப்பட்ட கண்ணகியின் கூந்தலைப் போல.

சித்ரா ரவியைப் பார்த்தாள். ரவி அவள் கூந்தலைப் பார்த்தான். எப்படிப் பின்னல் அவிழ்ந்தது? புரியாமல் தவித்தான் அவன்.

''மிஸ்டர் ரவி! இந்தக் கூந்தலிலே நீங்க எப்படி ஸார் ஒன்பது பின்னலை எண்ணினீங்க?'' என்று கோபமாகக் கேட்டாள் சித்ரா.

''நான் கணக்கிலே எப்பவுமே கொஞ்சம் வீக்!''

''இப்படிப் போய் சொல்ல உங்களுக்கு வெட்கமா இல்லே? உங்களை




நீங்கள் மூக்கால் பேசுபவராக இருந்தால் அதற்காக வருத்தப்பட வேண்டாம். கணீரென்று வாயாலேயே பேசுவதற்குச் சுலபமான சுவாசப் பயிற்சி ஒன்று உள்ளது. முதலில் ஓர் ஐந்து நிமிஷம் மூக்கினால் சுவாசத்தை உள்ளே இழுத்து வாயினால் வெளியே விட வேண்டும்.

நம்பி எங்கப்பாவைக் கூப்பிட்டது என்னுடைய முட்டாள்தனம்'' என்று எரிந்து விழுந்தாள் சித்ரா.

சின்னதுரை பந்தயத்தில் ஜெயித்த பணத்தோடு வந்து சேர்ந்தார். ''ரவி! நீ சாமான்யப்பட்ட ஆள் இல்லே. நீ சொன்ன மாதிரியே இன்னிக்கும் குதிரை ஜெயிச்சுடிச்சு! எங்கிட்ட சொன்ன மாதிரியே சித்ராவையும் நம்ம பக்கத்துக்கு இழுத்திட்டே'' என்று ரவியைப் பார்த்துக் கூறிவிட்டு, ''சித்ரா! நீயே வந்து என்னைக் குதிரைப் பந்தயத்துக்குக் கூப்பிடற மாதிரி செய்யறேன்னு சொன்னான். செய்து காட்டிட்டான்! பெரிய ஆள் இவன்!'' என்று சித்ராவிடமே ரவியின் வண்டவாளத்தை விளக்கி அவளுடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டார்.

சித்ராவுக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. ''மிஸ்டர் ரவி! இனிமேல் என் முகத்திலே விழிக்காதீங்க'' என்று கூறி விட்டு வேகமாக நகர்ந்தாள்.

சின்னதுரை ரவியிடம் ''உன்னை நாளைக்குச் சந்திக்கிறேன். ரொம்ப நன்றி!'' என்று கூறிவிட்டுச் சித்ராவைப் பின் தொடர்ந்தார்.

ரவியோ சித்ராவின் கூந்தலில் தான் எண்ணும்போது இருந்த ஒன்பது பின்னல்களும் எப்படி மாயமாக மறைந்தன, எப்படிக் கூந்தலே அவிழ்ந்து விட்டது என்று புரியாமல் விழித்தான்.

விரல்களால் விளையாடிக் கொண்டிருந்த நபர் தன் குதிரை தோற்ற கவலையையும் மறந்து முகத்திலே மகிழ்ச்சி தாண்டவமாடப் பந்தய மைதானத்தை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தார். ஒரு மேல் துண்டைப் பிய்த்துப் போட்ட

தோடு நிற்காமல், ஒரு பெண்ணின் கூந்தலை அவிழ்த்துவிட்ட மாபெரும் சாதனையை நினைத்துத்தான் அப்படிப் புளகாங்கிதமடைந்தாரோ, என்னவோ!

**ரா**ஜரத்தினம் வீட்டில் சிங்காரம், முத்துவை எதிராஜ் அனுப்பிய ஆள் என நினைத்து, அவனை இழுத்துக் கொண்டு வாசல் பக்கம் சென்றான்.

''அண்ணே! ரொம்ப ஜாக்கிரதையாக நடந்துக்கணும். நீ டாக்டர் இல்லேங்கறது வெளியே தெரிஞ்சுடப் போகிறது. ஜாக்கிரதை!'' என்றான் சிங்காரம்.

முத்துவுக்கு அடிவயிற்றில் புளியைக் கரைத்த மாதிரி — இல்லை — ஹோட்டல் மோரை ஊற்றின மாதிரி — இருந்தது. 'தான் டாக்டர் இல்லை என்ற விஷயம் இவனுக்கு எப்படித் தெரிந்தது?' என்று எண்ணி மிகவும் ஆச்சரியப்பட்டான்.

''ஏம்பா? என்னைப் பார்த்தால் டாக்டர் மாதிரி இல்லையா?''

''நீ பயப்படாதே! நான் சமாளிச்சுக்கறேன்'' என்றான் சிங்காரம்.

''இப்படி ஒரு மனிதனா? முன் பின் தெரியாத தனக்கு உதவ முன் வருகிறானே. இவன் எவ்வளவு நல்லவன்!'' என்று எண்ணி எண்ணி வியந்தான் முத்து.

''இதோ பாரு, வாத்தியாரே! நான் எவ்ளோ தேடியும் நெக்லெஸ் அம்புடலே. நீ வந்துக்கிரே. உசாராத் தேடிக் கண்டு பிடிச்சுடணும். அவ்ளோதான்'' என்றான் சிங்காரம்.

''நெக்லேஸா?''

''இன்னா நீ பச்சைப் புள்ளே மாதிரி கேக்கறே? நெக்லேஸ் எடுக்கத்தானே நாம் வந்திருக்கோம்.''

''எனக்கு நெக்லேஸூம் வேண்டாம், ஒட்டியாணமும் வேண்டாம்!''

''அக்காங்! இவ்ரு பெரிய இவ்ரு! நயினா நீ இன்னா மெய்யாலும் டாக்டர்னு நெனக்கினியா? நெக்லேஸ் அபேஸ் பண்ணிட்டா நம்ம நழுவிடலாம். அபேஸ் அடிக்க வந்துட்டு ஸூம்மா பேசிக்கினுக்கிறியே! சீக்கிரம் அபேஸ் அடி.''

''என்னது? சபேசனை அடிக்கணுமா? யாரவன் சபேசன்?''

''உன் பாட்டன்! இன்னா கிண்டலா காட்டறே?... சுத்த வெள்ளாட்டுப் புள்ளேயா கிறியே!''

இப்படி இந்த இருவரும் ஒருவருக்குப் புரியாமல் மற்றொருவர் பேசிக் கொண்டிருக்க, கிரிஜாவின் குரல் கேட்டது.

''சிங்காரம்! அங்கே யார் வந்திருக்காங்க?''

சிங்காரம் உடனே முத்துவிடம், ''சின்னம்மா கூப்பிடறாங்க. டாக்டர் மாதிரியே நடந்துக்க. வா, வா!'' என்று கூறி முத்துவை உள்ளே அழைத்துச் சென்றான். முத்துவோ தீவிர சிந்தனையில் ஆழ்ந்து, சிங்காரத்தைப் பின் தொடர்ந்தான். ''யார் இந்தச் சபேசன்? அவனை அடிக்கச் சொல்கிறானே, இந்த ஆள், அது ஏன்? சபேசனுக்கும் நெக்லஸூக்கும் என்ன சம்பந்தம்?'' என்பன போன்ற கேள்விகளுக்கு விடை தெரியாமல் விழித்துக்கொண்டே சிங்காரத்தோடு வீட்டினுள் சென்றான் முத்து.

கிரிஜா எதிரே வந்தாள். முத்துவின் சிந்தனை அறுபட்டது. கிரிஜாவின் தோற்றம் அவனைப் பிரமிக்கச் செய்தது. அவள் அழகில் அவன் மயங்கினான். ரம்பை, ஊர்வசி, மேனகை திலோத்தமை இவர்களோடு கிரிஜாவையும் சேர்த்து வரிசையாக நிற்க வைத்து 'உனக்கு வேண்டிய பெண்ணை நீயே தேர்ந்தெடுத்துக்கொள்' என்று முத்துவிடம் யாராவது கூறியிருந்தால் அவன் நிச்சயமாகக் கிரிஜாவைத் தேர்ந்தெடுத்திருக்க மாட்டான். ஆனால் ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை ஆகியோர்களைப் பார்க்க முடியாத நம் காலத்தில் கண்ணுக்குப் பட்ட பெண்களெல்லாம் நமது வாலிபர்களுக்கு அழகாகத் தென்படுவதில் வியப்பொன்றுமில்லை.

''சிங்காரம், இவர் யாரு?'' என்றாள் கிரிஜா. 'குயில்தான் கூவியதா, கிளிதான் பேசியதா? அல்லது வானம்பாடிதான் குரல் கொடுத்ததா?' என்றெல்லாம் சிந்திக்க முத்துவுக்கு வாய்ப்பளிக்கவில்லை கிரிஜாவின் குரல். அதுவும் ஒரு குரல் — அவ்வளவே.

சிங்காரம், ''அம்மா! இவர்தான் டாக்டர் மேகநாதன்!'' என்று முத்துவை அறிமுகப்படுத்தி வைத்தான்.

''ஓ! நீங்கதான் டாக்டர் மேகநாதனா?'' என்று கேட்டாள் கிரிஜா.

''சந்தேகமா இருக்கா?'' என்று பயத்தோடு கேட்டான் டாக்டர் வேஷத்திலிருந்த முத்து.

''கிக்கிக்கிக்கிக்கி...'' கிரிஜா சிரித்தாள். முத்து பெரிய ஹாஸ்யம் அடித்துவிட்டான் என்பதற்காக அல்ல. தனக்குச் சிரிப்பதற்குக் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாது என்ற தற்காலப் பெண்கள் நாகரிகத்தை ஒட்டித்தான் அவள் நகைத்தான். **(தொடரும்)**





மன்னன் புலுமாயியும் கண்டு ரசிக்கத்தான் செய்தான். அரச காரியமாக மாறு வேடத்தில் சேனாதிபதிகளுடன் அவ்வழியே சென்று கொண்டிருந்த புலுமாயி நன்மைக்கோ அல்லது தீமைக்கோ நருமதையாளைக் காண நேரிட்டு விட்டது! அடடா! என்ன அழகு! கொள்ளை அழகு! விண்டாரும் கண்டாரும் விளக்கிய சொற்றொடர்கள், நூற்றுக்கு நூறு உண்மை என்று முனகிக் கொண்டான் அந்த நூற்றுவக் கன்னர் வழி வந்த ஆற்றல் மிக்க அரசேறு!

பல்லக்குப் பயணம் உஜ்ஜயினியை நோக்கி நீண்டது. கண்ணிலே கிறக்கமும், கருத்திலே மயக்குமாகப் புறப்பட்டான் புலுமாயி. ஆயினும் ஒருவரை யொருவர் சந்தித்தார்களில்லை; சிந்தித்ததுண்டு. இப்போதும் கூட அந்தச் சிந்தனை மெல்லத் தலைதூக்கியது நருமதைக்கு! அவள் தோழியிடம் கேட்டாள்: ''காயத்திரி! பிரதிஷ்தானம் எங்கே இருக்கிறது?''

''அண்மையில்தானம்மா இருக்கிறது!''

''அரசர் புலுமாயியைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறாயா?''

''நன்றாகக்கேள்விப்பட்டிருக்கிறேனம்மா!''

நருமதையின் இருவிழிக் கதவங்கள் ஏன் தான் இப்படிப் படபடக்கின்றனவோ? ஓசையற்ற அந்தப் படபடப்பில் ஏதோ ஒரு துடிதுடிப்பு இருப்பதை உணர்ந்தாள் தோழிப் பெண் காயத்திரி.

''சொல் காயத்திரி! உனக்குத் தெரிந்த அளவுக்குச் சொல்! நன்றாகவும் விளக்கமாகவும் சொல்!''

''இளவரசி! அவர்மீது உங்களுக்கு ஏன் இவர்....''

''ஏன் நிறுத்திவிட்டாய்? பைத்தியக்காரி! என்னுடைய இந்த நிலையில் நான் அவரைப் பற்றிச் சிந்திப்பதில் தவறென்ன? காயத்திரி! நானோ மாவீரப் பேரரசர் மகாக்ஷத்திரபர் ருத்திரதாமருடைய செல்வப் புதல்வி; ஒரே புதல்வி. எனக்கேற்ற மணாளர் ஒருவர் இந்த மண்ணில் இருப்பாரேயானால் அவர் புலுமாயி ஒருவர்தான். இப்படி இருக்க நான் அவரைப் பற்றிச் சிந்திப்பதில் குற்றமென்ன இருக்க முடியும்?''

''இளவரசி! உங்களை என்னால் இப்போது தான் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனாலும் பிரதிஷ்தானத்தின் அரசர் தங்கள் குலப் பகைவராயிற்றே!''

''இந்த இடம்தான் என்னை வாட்டி வதைத்து வருகிறது. அதைப் பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். நீ அறிந்ததைச் சொல்லடி, தோழி!''

''நான் என்ன அவர் வாழ்க்கை வரலாற்றையா அறிந்து வைத்திருக்கிறேன்? சுருங்கச் சொன்னால் அவர் மாவீரர்!''

''நாடறிந்த செய்தி இது!''

''அவர் இளைஞர்; நல்ல அழகர்!''

''மன்மதனுக்கு நிகரானவர் என்றும் கூடச் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன்!''

நருமதையின் இதயத்திலிருந்து நெட்ட நெடிய பெருமூச்சொன்று வந்தது. அவளுடைய மனத்தின் அடித்தளத்தில் பிரார்த்தனை கீதம் கேட்டது. வாயோ மௌனத்தில் ஆழ்ந்தது. உதட்டில் மட்டும் அடிக்கடி புன்னகை மின்னி மறைந்து கொண்டிருந்தது.

அருமை மகள் நருமதையின் உள்ளக் கிடக்கையை அறிந்த உஜ்ஜயினி அரசர் ருத்திரதாமர், வெறுமை கலந்த சிரிப்புடன் ''மகளே! எத்தனை பெரிய கற்பனைக் கோட்டையைக் கட்டத் தொடங்கி விட்டாய்? இந்தப் பலமற்ற கோட்டையை எப்படியம்மா பலம் நிறைந்த கோட்டையாக மாற்றுவேன்?'' என்றார். அவருடைய அந்தப் பேச்சில் தொக்கி நின்ற இரண்டு

பொருள்களைப் பேதை நருமதை எங்ஙனம் உணர்வாள்?

தந்தையின் மாறுதலைக் குறிப்பால் உணர்ந்துகொண்ட நருமதை, "ஏனப்பா! முடியாத காரியம் என்கிறீர்களா? எனக்கேற்ற மணாளன் அவரைத் தவிர வேறு யாரப்பா இந்த மண்ணில் இருக்கிறார்கள்? அவருக்கு நிகரானவர் சேர நாட்டில் செங்குட்டுவ மாமன்னர் இருக்கிறார். அது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதை போலத்தான். ஏனோ தெரிந்தோ தெரியாமலோ என் மனம் பிரதிஷ்டானத்து மன்னரைக் காதலிக்கிறது அப்பா!" என்று கூறி முடித்ததும் நாணித் தலை குனிந்தாள். அவளுடைய செவ்விய முகம் மேலும் சிவந்தது.

மகளின் போக்கினை உணர்ந்த ருத்திரதாமர் செய்வதென்னவென்று புரியாமல் தனியாய்த் தவித்தார். போயும் போயும் குலப் பகைவனைக் காதலிக்கிறாளே இந்தப் பேதைப் பெண்! இவளுக்கு எப்படிச் சமாதானம் கூறுவது?

முடிவாகச் சொன்னார்: "அம்மா, நருமதை! உன் விருப்பத்துக்கு நான் குறுக்கே நிற்க விரும்பவில்லை. என்னுடைய வாழ்வுக்காக வாழ்ந்த காலங்கள் கரைந்துவிட்டன. இப்போது நான் வாழ்வது உனக்காக. உன் வாழ்வுக்காக! புளுமாயி நம் குடும்பப் பகைவன் என்று பரிபூரணமாகத் தெரிந்தும் அவனை மணக்க நீ ஆசைப்படுகிறாய். என்னால் முடிந்த அளவுக்கு முயல்கிறேன். பிறகு உன் தலைவிதிப்படி; ஆம். தலைவிதிப்படி என்றுதான் சொல்லத் தோன்றுகிறது மகளே!"

உஜ்ஜயினி அரசர் ருத்திரதார், மனத்தில் கவலையைத் தேக்கிக் கொண்டவராய், அருமை மகளின் ஆசையை நிறைவேற்றுவதில் தீவிரமாக முனைந்தார்.

உஜ்ஜயினித் தூதுவர்கள் பிரதிஷ்டானத்தை அடையும்போது மாலை மறைந்து இரவாட்சி தொடங்கிய நேரம். நீடு துயில் நீக்கிப் பாடி வந்த நிலவுக் கன்னி, பிரதிஷ்டானத்தின் அழகோவியத்தைக் குளிரச் செய்து கொண்டிருந்தாள். கலைப் புகழ் கொண்ட மரபல்லவா சாதவாகன மரபு!

---

பகை நாட்டிலிருந்து தூதுவர்கள் வந்திருக்கிறார்கள் என்று கேள்விப்பட்ட மாத்திரத்தில் ஐம்புலன்களிலும் உணர்ச்சி கொப்புளித்தது வாசிஷ்ட புத்திர ஸ்ரீ புளுமாயிக்கு. சில காலமாகவே அவன் சிந்தனை அலைபட்டு நடமாடி வந்தான். நருமதைக் கரையில் என்று தருமதையைக் கண்டானோ, அன்று முதற் கொண்டே அவனுடைய மனம் ஒரு நிலைப்படவில்லை. உஜ்ஜயினியில் இப்படி ஒரு பேரழகு வளர்ந்து வருவதை அவன் அறியான். பகைவனுடைய திருவயிற்றில் அல்லவோ காவியம் போல நருமதை பிறந்திருக்கிறாள்!

இதோ, எதிர்பாராமல் தூது வேறு வந்திருக்கிறது. என்ன விஷயமாக வந்திருக்கிறதோ?

எப்போதும் இரவில் தூதுவர்களை விசாரிப்பது கிடையாது. ஆனால் மனத்தில் எழுந்த உந்தல் உடனடியாக விசாரிக்கத் தூண்டியது மன்னன் புளுமாயியை! ஆகவே, அக்கணமே மந்திரிப் பிரதானிகளை வரவழைத்துத் தூதுவரை விசாரிப்பதில் முனைந்தான்.

"விண்ணவரும், மண்ணவரும் போற்றும் வீரப் பெருமன்னர் — சாதவாகன குலவிளக்காம் கௌதமி புத்திரன் திருக்குமாரர் — வாசிஷ்ட ஸ்ரீ புளுமாயி அவர்களுக்கு எங்கள் வணக்கம். எங்கள் மன்னர் ஸ்ரீ மகாக்ஷத்திரபர் ருத்ரதாமர் தங்களை மருமகனாக அடைய ஆசைப்படுகிறார். எங்கள் நாட்டு இளவரசி— பேரழகி — அறிவில் நல்லாள் — கலையில் வல்லாள் ஸ்ரீமதி நருமதா தேவியாரும் தங்களை மணாளராக ஏற்கச் சம்மதம் தெரிவித்திருக்கிறார். ஆகவே, தங்கள் மேலான முடிவினை அறிந்து செல்லவே நாங்கள் வந்திருக்கிறோம்."

வியப்பின் விளிம்பில் ஆழ்ந்தான் மன்னன் புளுமாயி! தூதுவர்கள் கொண்டு வந்த செய்தியினை அவனால் நம்ப முடியவில்லை; நம்பாமலும் இருக்க முடியவில்லை. என்னே எதிர்பாராத திருப்பம் இது! கனவுகூடக் காணவில்லையே! இப்படி ஒரு வாய்ப்பா?

மன்னன் புளுமாயி இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருந்த போது மகாமந்திரியின் குரல் கணீரென ஒலித்தது. "இது தூதாகப் படவில்லை; சூதாக எனக்குப் படுகிறது."

அனைவரும் அதிர்ச்சி கண்டனர். குறிப்பாக மன்னன் புளுமாயி பெரிதாக அதிர்ந்து காணப்பட்டான். "மகாமந்திரியாரே! விளக்கமாகச் சொல்லலாம்!"

மகாமந்திரியார் விளக்கினார்: "சாதவாகன குலவிளக்கே! நான் சொல்வது உங்களுக்குப் புரியவில்லையா? ஆமாம்; — இளம் வயதின் கோளாறு உஜ்ஜயனியின் அழகில் தேன் குடித்து விட்டது. மன்னவா! இன்றைய நாவலந்தீவின் தனிப் பெரும் குலமரபைக் கொண்டு பெரு மன்னராகத் திகழ்பவர் நீங்கள்! பரந்த சாம்ராஜ்யாதிபதி! ருத்திரதாமர் ஒருவர்தான் நம் ஆட்சிக்கு உட்படாதவர். சூது செய்பவர். முன்னம் அவர் நமக்கு அளித்த தோல்வியை எண்ணிப் பார்க்க வேண்டும். இன்னபிற காரணங்களால் ஏதோ சூதான நோக்கம் கொண்டு தூது அனுப்பியிருக்கிறார் என்றே என் மனத்துக்குப் படுகிறது!"

உஜ்ஜயினித் தூதுவர்கள் பதைபதைத்துப் போய் விட்டனர். "அமைச்சரின் பயங்கரமான சிந்தனை அவலமான முடிவை நோக்குகிறது!"

தூதுவர் தலைவன் என்னவோ, யதார்த்தமாகத்தான் இப்படிச் சொன்னான். இதனையே பற்றிக் கொண்ட மகாமந்திரியார், "பார்த்தீர்களா, மன்னவா! அவலமான முடிவு என்கிறார் தூதுவர்!" என்றார்.

"மகாமந்திரியாரே! நீங்கள்...." தூதுவர் தலைவன் பேச்சைத் தொடங்கு முன்னம், மகாமந்திரியார் தலையிட்டுக் கூறினார்: "பேச்சுக்கு இடமில்லை. உங்கள் இளவரசி நருமதா தேவியார் பிரதிஷ்டானத்தின் பட்டத்தரசியாகத்தானே ஆக வேண்டும்?" என்று கேட்டார். தூதுவர் தலைவனும், "எங்கள் அரசர் அதைத்தான் விரும்புகிறார்!" என்றான்.

"அப்படியென்றால் நிபந்தனையைக் கேளுங்கள். உங்கள் கோரிக்கை ஏற்கப்

# வசீகரமான வனப்பைப் பெறுங்கள்... முகத்திற்கு மோகன மேன்மை அளியுங்கள்!

வெண்பனிபோன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தடவிக்கொண்டால் உங்கள் சருமம் மிருதுத்தன்மை பெற்று, மழமழப்பாக, பனிச்சென்று திகழும்... முகத்தில் கரும்புள்ளிகள் வராமல் தடுப்பதோடல்லாமல், காற்றிலும், வெயிலிலும் சருமம் வரட்சி யடையாமல் பாதுகாக்கும். அதைத் தனியாகத் தடவிக் கொள்ளலாம் அல்லது அதன் மீது பவுடர் போடலாம், பவுடர் ஒரேசீராகப் படிந்து, மணிக் கணக்காகக் கலையாமல் இருக்கும். உலகெங்கும் பேரழகிகள் பலரும் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கின்றனர்.




**பாண்ட்ஸ்** வானிஷிங் க்ரீம்—பவுடர் ஒத்திக்கொள்ள ஏற்ற க்ரீம்!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

பட்டது. ஆனால், சீதனமாக உஜ்ஜயினியைத் தர வேண்டும் !''

''என்ன! நாட்டையே சீதனமாகவா?''

''ஆமாம்!''

''பிறகு எங்கள் அரசர் ?''

''பிரதிஸ்தானத்தின் பிரதிநிதி!''

'' நன்றாகச் சிந்தித்துத்தான் சொல்கிறீர்களா ?''

''முடிவாகவே சொல்லி விட்டேன்.''

''தவறினால்......!''

''நருமதையை...''மகாமந்திரியார் முடிக்கவில்லை; மன்னன் புலுமாயி இடைமறித்துக் கூறினான்: ''போரிட்டு உஜ்ஜயினியைப் பெறுவதோடல்லாமல், அதன் காவியமான நருமதையையும் பெற நேரிடும். ஆக எப்படிப் பார்த்தாலும் நருமதை பிரதிஸ்தானத்தின் பட்டத்தரசிதான் என்று உங்கள் சகபதியிடம் கூறுங்கள் !''

மன்னன் புலுமாயி அதற்கு மேலும் அங்கு அமர மனமில்லாமல், எழுந்து நேரே நிலா மாடம் நோக்கி நடந்தான். அவனுடைய மனத்தில் நருமதை நன்றாகவே நர்த்தனமிடத் தொடங்கி விட்டாள் என்பதை மகாமந்திரியார் புரிந்துகொண்டார்.

**தூ**துவர்கள் கொண்டு வந்த செய்தியைக் கேள்விப்பட்டது முதல் தூண்டில் புழுப் போல் துடிக்கலானாள் இளவரசி நருமதை ! ஆனாலும் ஒரு நிறைவு இருக்கத்தான் செய்தது. 'எப்படிப் பார்த்தாலும் பிரதிஸ்தானத்தின் பட்டத்தரசிதான்' என்று சாதவகன மன்னர் சொல்லியனுப்பினாராமே !

அரசர் ருத்திரதாமருக்கும் இந்த நிறைவு இருந்தாலும், தோல்வி மனப்பான்மையுடன் மகளை மணம் செய்வதா ? உஜ்ஜயினியைச் சீதனமாகக் கொடுத்துவிட்டால் அரசர் குலத்துக்குப் பேரிழுக்கல்லவா? அரசருக்கு ஏற்பட்ட சுயநலம், மரபையும், நாட்டையும் அடிமையாக்கியது என்று தூற்றுவதோடு நிறுத்தாமல் மக்கள் துடித்தெழுவார்களே! பின் முடிவுதான் என்ன? போர்! போர்! போர்! ஆமாம்; புலுமாயி போர்த் தொடக்கம் செய்யுமுன்னம் நாமே முந்திக் கொள்ள வேண்டும்.

வலிமை பொருந்திய சகர் குலத்துக்குப் பலர் துணை நின்றனர். உஜ்ஜயினி அரசர் ருத்திரதாமர் போர்முரசம் கொட்டத் தொடங்கிய செய்தியறிந்து முதலில் சற்றே நடுக்கம் கண்டான் புலுமாயி. என்ன இருந்தாலும் முரட்டுத் தன்மையும், அரக்கர் வெறியும் கொண்ட குலமல்லவா சக குலம் ?

சாதவாகனப் பேரரசின் படையே திரண்டது. இருதரப்பிலும் வீர சபதத்தின் குரலொலிகள் விண்ணை யளாவின! மூண்டது போர் மும்முரமாக! மூன்று தினங்களாகக் கடும் போர் நடந்து கொண்டிருந்தது.

வண்ணத் துகில் மனையில் எண்ணத்தின் ஊஞ்சலிலே அசைந்து கொண்டிருந்த இளவரசி நருமதைக்கு மட்டும், இந்த மூன்று தினங்களாக ஊணுறக்கமில்லை. ஆமாம்; அவளை ஏன் அரசர் ருத்திரதாமர் போர்க்களம் நோக்கி அழைத்து வந்திருந்தார்? இது நருமதைக்கே புரியாத விஷயம்.

**நா**ன்காம் நாள் போர் !

ஏறத்தாழ இருபது நாழிகைகள் பூமியை அதிரச் செய்தனர் இருதரத்துப் போர் வீரர்களும்! மாலை மறைய ஐந்து நாழிகைகள் இருந்தன. சகர்களின் கை ஓங்கத் தொடங்கியது. அது மேலும் ஓங்க, ஓங்க, சாதவாகன வீரர்கள் புறமுதுகிட்டு ஓடத் தலைப்பட்டனர். ஒரு நாழிகைப் போதுக்கெல்லாம் சாதவாகனர் வீழ்ச்சி கண்டனர்; சிறைப்படத் தொடங்கினர். சகர்களின் கொடி வானளாவத் தொடங்கியது. அரசர் ருத்திரதாமர் கெக்கலி கொட்டிப் பெருநகை எழுப்பினார். அது அடங்குவதற்குள் அங்கே சங்கிலி பூட்டிய விலங்குடன் சாதவாகனச் சிங்கம் புலுமாயியை அழைத்து வந்து நிறுத்தினர் சக வீரர்கள். அவனை உற்று உற்று நோக்கிய அரசர் ருத்திரதாமர், குறுநகை பூத்தவராய் அருகே சென்றார். ''வலிய வந்த சீதேவியை உதைத்ததன் பயனை அநுபவித்து விட்டாய் புலுமாயி ! வீரம் கண்ட அளவுக்கு உனக்கோ, உன் அமைச்சனுக்கோ மதி வளமில்லாமல் போய் விட்டது..... நருமதை என் ஒரே மகள். எனக்குப் பிறகு உஜ்ஜயினியை ஆளும் ஒரே வாரிசு அவளை மணப்பவன்தானே ? இதை மறந்து வீர முழக்கம் செய்யத் தொடங்கி விட்டீர்கள். வாள் வாளோடு மோதலாம்; வஜ்ராயுதத்துடன் மோதலாமா? இந்த ருத்திரதாமன் கையிலிருப்பது வஜ்ராயுதம் என்பதை மறந்து விட்டாய்'' என்று கூறி நிறுத்திய ருத்திரதாமர், தம்மை மறந்த பெருங்குரலுடன் ''மகளே, நருமதா !'' என்று அழைத்தார் அந்த அழைப்புக் குரல் கேட்டு அகிலமே நடுங்குவது போலத் தோன்றியது. சற்றைக்கெல்லாம் நருமதை புன்னகை பூத்த முகத்தினளாய் அருகே வந்தாள்.

புலுமாயியை நோக்கிய ருத்திரதாமர், ''எப்படிப் பார்த்தாலும் நருமதை பிரதிஸ்தானத்தின் பட்டத்தரசிதான் என்று உன்னுடைய வாய்தானே கூறியது? புலுமாயி, எப்படிப் பார்த்தாலும் நருமதை பிரதிஸ்தானத்தின் மருமகள்தான்'' என்று கூறி நிறுத்தி, வீரர்களை நோக்கி, ''விலங்கை அவிழ்த்து விடுங்கள்'' என்றார்.

விலங்கு அவிழ்க்கப் பட்டது.

மகளை நோக்கிய ருத்திரதாமர், ''அம்மா! அந்த முத்து மாலையைக் கழற்றி மாலையிடு'' என்றார். நருமதையும் கொஞ்சமும் தயங்காமல் அவ்வண்ணமே மாலையிட்டாள். அப்போது ருத்திரதாமர் சொன்னார்: ''புலுமாயி என்வசம் வந்துவிட்ட பரந்த சாதவாகனப் பேரரசையே உனக்குச் சீதனமாக அளிக்கிறேன்! சினத்தை மறந்து அவளுடைய கழுத்தில் மாலையிடச் செய்யப்படு!'' என்றார்.

அடிபட்ட வேங்கை போல் நின்றிருந்த புலுமாயி, அணங்கின் ஸ்பரிசத்தால் துடிபட்ட கிளர்ச்சியைக் கண்டு துயர் மறந்தான் — தோல்வி மறந்தான் — துணையை ஏற்றான் !

மண் பிளந்த போரொலிகள் மறைந்தன! விண் பிளக்கும் மங்கல ஒலிகள் எழுந்தன !

உஜ்ஜயினியும், பிரதி ஸ்தானமும் மீண்டும் உறவு கொண்டன.








COLGATE
BABY
POWDER



---




BAHOLA




BAHOLA



# நினைவில் நின்றவள்

நாகேஷும், 'சோ'வும் சேர்ந்து நடத்தும் பல ஹாஸ்ய நாடகங்கள் ஒன்று சேர்ந்து இந்தப் படத்தை நினைவில் நிற்கச் செய்கின்றன.

'சோ'வின் நடிப்பு மிகவும் இயல்பாயிருக்கிறது. மனைவியோடு பேசும்போது ஒரு தமாஷ், அண்ணனோடு பேசும்போது ஒரு தமாஷ், அண்ணன் மகள் பிரேமாவோடு பேசும்போது ஒரு தமாஷ்—இப்படி ஒரே தமாஷாக நடிக்கும் 'சோ' நாகேஷுடன் சேர்ந்து விட்டால் தமாஷுக்குக் கேட்பானேன்?

வில்லனிடம் வகையாகச் சிக்கிக் கொண்டு மனைவிக்கு டெலிபோன் செய்யும்போது சலவைக்குப் போட வேண்டிய உருப்படிகளின் எண்ணிக்கையைக் குறிப்பிடுவதுபோல வில்லனின் டெலிபோன் நம்பரைச் சொல்லுவது நல்ல உத்தி.

ஜவுளிக் கடையில் உள்ளும் புறமும் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டும் மெல்லிய புடவையை எடுத்துப் பார்த்துவிட்டு, ''அட, இந்தமாதிரிப் புடவையைச் சினிமாவில் வரும் பாத்திரம் உடுத்திக் கொண்டால் சென்ஸாரில் தாட்சிண்யம் காட்டாமல் வெட்டி விடுகிறார்கள். ஆனால் தெருவில் இதை உடுத்திக்கொண்டு போகிறவர்களை என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டுக் கொட்டகையைச் சிரிப்பில் ஆழ்த்துகிறார். இம்மாதிரி பல ஹாஸ்ய வெடிகள்.

நாகேஷின் நடிப்புக்குத் தனியாக எதுவும் சொல்ல வேண்டியதில்லை. சமையல் புத்தகத்தை வைத்துக் கொண்டு கே. ஆர். விஜயாவுக்கு அவர் சமையல் சொல்லித் தரும் அழகு ஒன்று போதும்.

கே. ஆர். விஜயாதான் கதாநாயகி பிரேமா. ஆனால் அவர் ரசிகர்களின் நினைவில் நிற்கவில்லை. காரில் அடிபட்டு, 'அம்னீஷியா' நோய் வாய்ப்பட்டும் அந்தப் பாத்திரத்தினிடம் ஏனோ அநுதாபம் உண்டாகவில்லை; ''என்ன தெரியும் இந்தச் சின்னப் பெண்ணுக்கு'' என்ற பாட்டுக்கு ஏற்ப கே. ஆர். விஜயா ஆடும் ஆட்டம் அருவருப்பாகக் கூட இருக்கிறது. திறமை வாய்ந்த ஒரு நடிகையைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லையென்றுதான் கூறவேண்டும்.

'சோ'வுடன் இணையாக நடிக்கும் மனோரமா வழக்கம்போல் சிறப்பாக நடித்திருக்கிறார்.

திரைக்கதை, வசனம் எழுதியிருப்பவர் 'சோ'. பல பழைய விகடத் துணுக்குகள் இடம் பெற்றிருந்தாலும் வசனம் பாராட்டும்படி அமைந்திருக்கிறது.

டைரக்டர் வி. சீனிவாசன் தம் பணியைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

ரவிசந்திரனின் நடிப்பில் பாராட்டும்படி எதுவுமில்லை.

ஐந்து பாடல்களில், ''நந்தன் வந்தான் கோவிலிலே'' என்ற பாடல் விறுவிறுப்பாயிருக்கிறது. குமாரி சச்சுவும், நாகேஷும் அப்போது அபாரமாய் நடித்து எல்லோரையும் சிரிக்க வைக்கிறார்கள்.

படத்தில் உள்ள பல குறைகளை நகைச்சுவை நன்றாக மூடி மறைத்து விடுவதால், நாமும் எல்லாவற்றையும் மறந்து, சிரித்து விடுகிறோம்.



## பொறாமைப் புழுதி

# கல்லுக்குள் ஈரம்

கட்டிலிலே படுத்திருந்த சிவானந்தத்துக்குத் தூக்கம் வரவில்லை. பக்கவாட்டில் திரும்பிப் படுத்துக் கொண்டு கமலவாசகியையே பார்த்துக் கொண்டிருந்தான். கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தவாறு ஒரு துண்டுத் தாளில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள் கமலவாசகி. விளக்கொளியில் தந்தச் சிலை மாதிரி பளபளத்த அவளையே கண் கொட்டாமல் பார்த்துக் கிறங்கிக் கிடந்தான் சிவானந்தம். அவளுடைய அழகும், ஒய்யாரமும் அவனை மயக்கிக் கொண்டிருந்தன.

அவளைக் கூர்ந்து பார்த்தான். அவளோ மும்முரமாக எதையோ எழுதிக் கொண்டிருந்தாள். திடீரென்று அவனுக்கு ரங்கமணி சொன்னது ஞாபகத்துக்கு வந்தது—

சில நாட்களுக்குமுன் ரங்கமணியோடு பேசிக் கொண்டிருந்தபோது சிவானந்தம் சொன்னான்: ''மனிதன் சுதந்திரமாக வாழ முடியவில்லையே. ஒவ்வொரு பருவத்தில் ஒவ்வொன்றுக்கு அடிமையாக வேண்டியிருக்கிறது. உடலுக்கு அடிமை, உணர்ச்சிக்கு அடிமை, பொன்னுக்கு அடிமை, பெண்ணுக்கு அடிமை..... இப்படி ஒவ்வொன்றுக்கும் நாம் அடிமையாகத்தானே வாழ வேண்டிய நியதி ஏற்பட்டிருக்கிறது.''

''அடிமையாகத்தான் வாழ வேண்டும் என்பதில்லையே. தோழமை பூண்டும் வாழலாமே. ஒவ்வொரு பருவத்தில் நமக்கு ஒவ்வொரு விதமான துணை தேவைப்படுகிறது. குழந்தையாக இருக்கும்போது மண்ணோடு





விளையாடுகிறோம்; குமாரனாயிருக்கும் போது பெண்ணோடு விளையாடுகிறோம். விளையாட்டுத்தான் வேண்டுமே தவிர, மண்ணுக்கும் பெண்ணுக்கும் அடிமையாவானேன்?'' — என்றார் ரங்கமணி.

இந்தப் பழைய நினைவு வந்ததும் வசந்தம் தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள்.

''ரங்கமணியின் வாழ்க்கையில் கமலவாசகியைப் போல் ஓர் அழகு இன்னும் குறுக்கிடவில்லை. பருவம், மனிதனை அழகுக்கு அடகு வைத்து விடும் என்பதை அப்போதுதான் உணருவான்'' என்று அவள் மனம் முனகிக் கொண்டது.

அவள் பார்வை கமலவாசகியை மொய்த்துக் கொண்டிருந்தது. திடீரென்று படுக்கையிலிருந்து எழுந்து நாற்காலிக்குப் பக்கத்தில் போய் நின்றுகொண்டு வாஞ்சையுடன் கமலவாசகியின் தோள்களைப் பற்றினாள். எழுதுவதை நிறுத்திவிட்டு அவளை நிமிர்ந்து பார்த்தாள் கமலவாசகி. அவள் கண்களில் மிதந்த போதையை உணர்ந்தாள்.

''இன்னும் தூங்கவில்லையா ?'' என்று கொஞ்சிக்கொண்டே கேட்டாள்.

''தூக்கம் வரவில்லை. என்ன எழுதுகிறாய் ?''

''நாளைக்குச் சிந்துபூந்துறை பள்ளிக்கூட ஆண்டு விழாவில் பேசுவதற்குக் குறிப்பு எழுதுகிறேன்.''

''எதைப் பற்றிப் பேசப் போகிறாய்?''

'''பள்ளியும், இலக்கியமும்' என்பது பற்றி.''

''அடேயப்பா, பெரிய விஷயமாயிற்றே!''

''கூட்டத்துக்குக் கலெக்டரின் மனைவிதான் தலைமை வகிக்கிறாள். ஆண்டு விழாவுக்கு நீங்கள் வரப் போவதில்லையா ?''

''எப்படி முடியும்? நாளை பட்டணத்திலிருந்து மேல் அதிகாரி வருகிறார்.''

இந்தச் சமயத்தில் கடிகாரத்தில் மணி பத்து அடித்தது. ''பத்து மணியாகி விட்டது. பாக்கியை நாளைக் காலையில் எழுதிக்கொள். மாலையில்தானே பேச வேண்டும்'' என்று கூறிக் கொண்டே அவள் கரங்களைப் பற்றி இழுத்தாள் வசந்தம். அவள் நாற்காலியிலிருந்து எழுந்து கட்டிலை நோக்கி நடந்தாள். கையைப் பற்றிய போது அவள் விரலில் போட்ட வைர மோதிரம் வசந்தத்தின் விரல்களை அழுத்தியது. இருவரும் கட்டிலில் உட்கார்ந்த போது வசந்தத்தின் கவனம் அந்த வைர மோதிரத்தில் நிலைத்தது. அவள் கையைத் தூக்கி ஒளிவீசிக் கொண்டிருந்த மோதிரத்தைப் பார்த்தாள். திருமணத்தன்று அவள் அவனுக்குப் பரிசாகக் கொடுத்த மோதிரம் அது.

# 3 ஜி. இ. ஸி. வரிசையில் மகோன்னத ரேடியோக்கள் உங்கள் ரேடியோ கடையில் இப்பொழுதே பாருங்கள்!

BC 6156 5 வால்வுகள், 3 பாண்டுகள், 5" லௌட்ஸ்பீக்கர், ஸ்லோ மோஷன் டியூனிங் ட்ரைவ்; உள் பக்கமே வைத்திருக்கும் பெரைட் ராட் ஏரியல், பிக்கப்பிற்கு இணைப்பு அழகான மோல்டெட் காபினெட்

AC/DC — விலை. ரு 278
AC ,, ரு. 290

BC 507 – 3 பாண்டு, 8 ட்ரான்ஸிஸ்டர் போர்டபிள் - குறைந்த பாட்டரிச் செலவு. ஏராளமான மின்சார உற்பாதனம். நல்ல ஸிக்னல்/சப்த பரிமாணம். HI-LO டோன் கண்ட்ரோல்.

விலை ரு. 395

G.E.C.

மிக அற்புதமான ரேடியோக்கள்

தி ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்

AC 5356 (AC 200-250 V)

6 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள் பெரிய, எளிதில் உணரும் சக்தியுள்ள எலிப்டிக்கல் லௌட்ஸ்பீக்கர். அழகான வால்நட் வெனீர் காபினெட்.

விலை ரு 415

GEC/ 273



## பகவானின் சாரத்தியம்

'மனமே, மனிதனின் சாமர்த்தியம் எம்மாத்திரம்! உலகங்கள் அனைத்தையும் ரதமாக்கி ஓட்டி வைப்பவன், ஆட்டி வைப்பவன் ஒருவன் இருக்க நம் ஆற்றல் எம்மாத்திரம்?' என்று ஸ்ரீ தியாகையர், ''மனஸா, மனஸாமர்த்யமேமி?'' என்ற கிருதியில் கேட்கிறார்.

ஆண்டவன் உலக ரதத்தை ஓட்டுபவன், நாம் அந்த ரதத்தில் அமர்ந்திருப்பவர்கள் என்றால் நமக்கு அவன் டிரைவர் போலாகி விடுகிறதே. இது பொருந்துமா? இதற்கு ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் தந்த அழகான விளக்கம் வருமாறு: ''இந்தக் காலத்தில் டிரைவரைக் காரில் அமர்த்திவிட்டு எஜமான் காரோட்டுகிறார் அல்லவா? அப்படியேதான் பணியாட்களான நம்மை விகல ரதத்தில் அமர்த்தி, எஜமானனான ஆண்டவன் அதை ஓட்டுகிறான். ரதத்தின் சொந்தக்காரன் அவனேயன்றி நாமல்ல.''

''ரொம்ப வந்தனம். என்னுடைய வீட்டுக்கு வாருங்களேன்'' என்று கமலவாசகியை அழைத்தாள்.

''வா, போய்விட்டு வரலாம்'' என்று கூறிக் கொண்டே காரிலிருந்து கீழே இறங்கி விட்டான் வெங்கு. கமலவாசகி செய்வதறியாது திகைத்தாள்.

''சும்மா வாருங்கள்'' என்று வற்புறுத்தினாள் திரிவேணி.

''வா, வா..... சும்மா வா. கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் பிறகு போகலாம். என்ன அவசரம்?'' என்று கூறிக் கொண்டே காரின் பின்பக்கத்துக் கதவைத் திறந்தான் வெங்கு. அவன் மீது கமலவாசகிக்குக் கோபம் வந்தது. ஆனால் அந்த இடத்தில் என்ன செய்ய முடியும்? வேண்டாவிருப்புடன் காரிலிருந்து இறங்கித் திரிவேணியைத் தொடர்ந்து வீட்டினுள் நுழைந்தாள். திரிவேணியின் அறையில் கிடந்த சோபாவில் அமர்ந்தாள்.

''எங்கள் வீட்டுக்கு வர நீங்கள் பயப்படத் தேவையில்லை. நீங்கள் ஒரு போலீஸ் அதிகாரியின் மனைவி என்பதை நான் உணராமலா இருக்கிறேன்? நமக்குள் கொள்கை வித்தியாசமாயிருக்கலாம். அதற்காக நாம் விரோதிகளாக இருக்கக்கூடாது என்பதில்லையே. வெள்ளைக்காரர்களிடம்கூட நாங்கள் நட்பைத்தான் விரும்புகிறோம்'' என்றாள் திரிவேணி.

''அதற்காக இல்லை. நேரமாகிவிட்டது. வீட்டில் அவர் காத்திருப்பார்....!'' என்றாள் கமலவாசகி.

''சிவானந்தம் இப்போது வீட்டில் இருக்க மாட்டார். ஏழு மணிக்குத்தான் வருவார். இப்போது மணி ஆறரைதானே ஆகிறது?'' என்று இடைமறித்துச் சொன்னான் வெங்கு. அவனுடைய வெகுளித்தனம் திரிவேணிக்குச் சிரிப்பை மூட்டியது. கமலவாசகிக்கோ எரிச்சலையும் கோபத்தையும் உண்டாக்கியது.

அத்தையை அழைத்து வர வீட்டின் உள் பக்கம் சென்றாள் திரிவேணி. அவள் சென்றதும் வெங்குவின் மீது எரிந்து விழுந்தாள் கமலவாசகி.

''டேய் மண்டு, முந்திரிக் கொட்டை மாதிரி ஏண்டா பேசுகிறாய்?''

''இப்போது என்னவாம்?''

''என்னவா, உன்னால்தான் இந்தத் தொந்தரவெல்லாம். அவளை ஏண்டா நம் காரில் வரச் சொன்னாய், மடையா!''

''என்ன குடி முழுகி விட்டது இப்போது? நீங்கள் இருவரும் பேசிப் பழகலாமே என்றுதான்.......''

''இதுதான் குறைச்சல்!'' என்று முறுமுறுத்து விட்டு அந்த அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தாள் கமலவாசகி. அவளுடைய பார்வை மேஜையின் மீதிருந்த படத்தின் மீது விழுந்ததும் திடுக்கிட்டாள். பரபரப்புடன் எழுந்து மேஜைப் பக்கம் சென்று அந்தப் படத்தை உற்றுப் பார்த்தாள்.

சந்தேகமே இல்லை, ரங்கமணியின் போட்டோப் படம்தான் அது !

ரங்கமணியை அந்தப் படத்தில் கண்டதும் கமலவாசகியின் முகம் மலர்ந்தது. ஆவலோடு படத்தைக் கையில் எடுத்து உற்றுப் பார்த்தாள். பழைய நினைவுகளின் இனிமை அவள் உடல் முழுதும் பரவிப் படர்ந்தது. ஒரு கணத்தில் கடந்தகாலச் சம்பவங்கள் அனைத்தும் நினைவில் நிழலாடி மறைந்தன. திடீரென்று சுய உணர்வை அடைந்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். மீண்டும் ரங்கமணியின் படத்தைப் பார்த்தாள்.

''இது இந்த இடத்துக்கு ஏன் வந்தது? அதுவும் திரிவேணியின் மேஜை மீது?''

இந்தக் கேள்வி கமலவாசகியின் மனத்தைக் குடைந்தது. பூமியே காலுக்கடியிலிருந்து நழுவுவது போல் தோன்றியது. அந்தப் படத்தை மீண்டும் வெறிக்கப் பார்த்தாள்.

ஒரு காலத்தில்..... ஒரு காலத்தில் என்ன, இப்போதுகூடத்தான் அவள் நினைவில் பதிந்து கிடக்கும் உருவம்தானே அது.

''என்ன பார்க்கிறாய்? இதுதான் ரங்கமணி'' என்று வெங்கு பக்கத்தில் நின்று கூறியது அவளுக்குக் கனவு உலகில் கேட்பது

போயிருந்தது. அவன் நிலைதடுமாறினான். ரங்கமணி படத்திலிருந்து கொண்டு அவனைப் பார்த்துச் சிரித்தான். அவன் இதயமோ அழுது கதறியது.

"சுயேச்சைப் பத்திரிகையில் வேலை பார்க்கிறார் ரங்கமணி. எவ்வளவு நல்லவர் தெரியுமா? என்னுடைய படத்தைப் பத்திரிகையில் போடுவதாகச் சொல்லியிருக்கிறார்" என்றான் வெங்கு உற்சாகத்துடன்.

கமலவாசகியின் உள்ளத்தில் ஊழித் தீ பற்றிப் பரவியது. பொறாமையின் உக்கிரம் தாங்காமல் தவித்தாள். தனக்குக் கிடைக்காத பொருள் திரிவேணியிடம் சிக்கி யிருக்கிறது என்ற நினைவே அவளால் சகிக்க முடியவில்லை.

அவளுக்குக் கிடைக்காத பொருளா அது? தேவை இல்லை என்று அவள் உதறிய பொருளைத்தானே திரிவேணி படமாக்கித் தன் மேஜையின் மீது வைத்திருக்கிறாள். இனி அதைப் பற்றி நினைக்கக்கூடக் கமலவாசகிக்கு உரிமை ஏது? உரிமை இழந்த பொருளை மாற்றான் கையில் பார்க்கும் போதுதான் ஏமாற்றத்தின் அழுத்தத்தை அதிகமாக உணர முடிகிறது.

கமலவாசகி ஏமாந்து விட்டாள். தன்னையே ஏமாற்றிக் கொண்டாள். கைக்கு எட்டிய ரங்கமணியை என்றுமே தீண்ட முடியாத தூரத்தில் நிறுத்தியவள் அவள்தான். இப்போது மனம் உடைந்து படத்தைக் கண்டு பரிதவிக்கிறாள். அதுவும் அந்தப் படம், திரிவேணியின் மேஜையின் மீது இருப்பது தான் அவள் ஆத்திரத்தை மேலும் தூண்டியது. தாங்க முடியாத மனக் கொதிப்பால் அவளுடைய பூவுடல் இலேசாக நடுங்கியது. கையிலிருந்த படத்தை மேஜை மீது வைத்து விட்டுப் பரபரப்புடன் திரும்பினாள்.

"டேய், வெங்கு. வாடா!.....!" என்று சொல்லிக் கொண்டே வாசல் பக்கம் விரைந்தாள். ஒன்றும் புரியாமல் வெங்கு திகைத்தான். அவளைத் தொடர்ந்து ஓடினான்.

"என்ன இப்படி....? அத்தையைக் கூப்பிடத் திரிவேணி உள்ளே போயிருக்கிறாள். அவளிடம் சொல்லிக் கொள்ளாமல்...."

"சீச்சீ, பேசாமல் வாடா !" என்று சீறினாள் கமலவாசகி. அவளுடைய கோபத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறினான் வெங்கு. கமலவாசகி விரைந்து சென்று காருக்குள் ஏறிக் கதவைச் சாத்திக் கொண்டாள். வெங்கு காரின் முன் பக்கத்தில் ஏறி அமர்ந்து கொண்டான். சீக்கிரம் காரைச் செலுத்தும்படி காரோட்டிக்கு உத்தரவிட்டாள். கமலவாசகியின் படபடப்பையும், கோபத்தையும் கண்டு காரோட்டி திகைத்துப் போய் விட்டான்.

"ஏய், டிரைவர்! என்ன விழிக்கிறாய்? சீக்கிரம் ஓட்டு!" — எரிந்து விழுந்தாள் கமலவாசகி. மறுகணம் கார் சீறிக் கொண்டு கிளம்பியது. அது புறப்பட்ட மறுகணம் பரபரப்புடன் வாசலுக்கு வந்தாள் திரிவேணி. பின்னால் அத்தையும் வந்தாள். சொல்லிக் கொள்ளாமல் கமலவாசகி போனதை நினைத்துத் திரிவேணியின் மனம் கசந்தது.

## சங்கீத சிகிச்சை



சங்கீதத்தின் மூலம் மூளைக் கோளாறுகளைக் குணப்படுத்த முடிகிறது என்பது நாம் அறிந்ததே. பாரிச வாயுவைக்கூட இசையால் குணப்படுத்த முடியும் என்கிறார் பிரிட்டன் சங்கீத சிகித்சைக் கழக ஸ்தாபகியான குமாரி ஜூலியட் ஆல்வின்.

பாரிச வாயுவால் தொடர்ந்து பேச முடியாத நிலையை அடைந்தவர்களும்கூட ஓரிரு ஸ்வர ஸ்தானங்களை முனக முடியுமாம். அவர்களை அதற்கு அநுசரணையான இசையைக் கேட்கச் செய்து, அதையே அவர்களும் திருப்பிப் பாடச் செய்வதன் மூலம் முடிவில் பேசவும் வைக்கலாமாம். பாரிசவாயு வந்த போதிலும் ஒரு கையை மட்டும் அசைக்கக் கூடியவர்கள் உண்டு. இவர்களது கைபடும்படி ஒரு தாள வாத்தியத்தையோ தந்தி வாத்தியத்தையோ வைத்து அதனை அவர்கள் கண்டும்படி செய்தால், அவர்கள் எழுப்பும் சங்கீத ஒலியாலேயே அவர்களது கையின் இயக்கத்தை எளிதாக்கவும், அதன் விளைவாகப் பொதுவாக இதர அங்கங்களின் முடக்கத்தைக் குணப்படுத்தவும் முடிகிறதாம்.

ஆதாரம்: ஸன்டே ஸ்டான்டர்ட்

"ஏன் இப்படிச் சொல்லிக் கொள்ளாமல் ஓடுகிறாள்?" என்று அத்தை கேட்டாள். திரிவேணி சிரித்தாள்.

"பெரிய அதிகாரியின் மனைவி அல்லவா? அவ்வளவுதான் அவளுக்குத் தெரிந்தது. பாவம்......." என்றாள்.

"காரணம் ஒன்றுமில்லை; உன்னுடைய அறையில் மகாத்மா காந்தியின் படங்கள் ஒன்று போதாது என்று நாலைந்து மாட்டியிருக்கிறாயே. அவற்றைப் பார்த்துவிட்டுத் தான் மிரண்டு ஓடுகிறாள். போலீஸ் அதிகாரியின் மனைவி இல்லையா?" என்றாள் அத்தை சிரித்துக் கொண்டே.

தூரத்தில் புழுதியைக் கிளப்பிக் கொண்டு கமலவாசகியின் கார் மறைந்து சென்றது. அந்தப் புழுதி மாதிரிதான் கமலவாசகியின் இதயத்திலும் பொறாமை மண்டிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



# கோஹாக் குட்டிக் கதைகள்

கோஹா என்பவன் நம் நாட்டுத் தெனாலிராமனைப் போன்றவன். கோமாளித்தனத்திலும் சரி, புத்திசாலித் தனத்திலும் சரி இவன் இணையற்றவன். இவனைப் பற்றிய இந்தக் குட்டிக் கதைகள், 922லிருந்து 925வது இரவு முடிய நான்கு இரவுகளில் சொல்லப்பட்ட அரபுக் கதைகளிலிருந்து எடுக்கப்பட்டவை ஆகும். கோஹா கெய்ரோ நகரத்தைச் சேர்ந்தவன் என்றும், அவனுக்கு ஒரு தொழிலும் கிடையாது என்றும், ஏகதேசமாக மசூதிகளில் ஆசிரியத் தொழில் பார்த்தவன் என்றும் கதைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. அவனை ஒரு கற்பனைப் பாத்திரமாகவே கொள்ள வேண்டும். (தொகுப்பு: கு. அழகிரிசாமி)

## கழுதையின் பேச்சை நம்புவானா, புத்திசாலி?

○ ஒரு நாள் கோஹாவின் வீட்டுக்கு அவனுடைய நண்பன் ஒருவன் வந்து, "நான் திடீரென்று வெளியூர் போக வேண்டியிருக்கிறது. தயவு செய்து உன் கழுதையை இரவல் கொடுக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டான்.

(கழுதை மேல் ஏறி ஊர்ப் பிரயாணம் செய்வது அந்நாட்டு வழக்கம்.)



அந்த நண்பன் நாணயமில்லாதவன். இரவல் வாங்கியதைத் திருப்பித் தருவானா என்று கோஹாவுக்குச் சந்தேகம். அதனால், "அடடா! என்னிடம் இப்போது கழுதை இல்லையே! விற்றுவிட்டேனே! இருந்தால் கட்டாயம் கொடுப்பேன்..." என்றான் கோஹா.

அந்தச் சமயம் பார்த்து வீட்டின் பின்புறத்தில் உள்ள தொழுவில் கட்டிக் கிடந்த கழுதை ஓயாமல் கனைக்க ஆரம்பித்து விட்டது!

"கழுதை வீட்டில் இருக்கிறதே! வைத்துக் கொண்டே இல்லை என்று சொல்லுகிறாயே?" என்று கேட்டான் நண்பன்.

உடனே கோஹா, "நீ விவேகியான ஒரு மனிதனின் பேச்சை நம்பவில்லை; கழுதையின் பேச்சை நம்புகிறாய். அதனால் நீ ஒரு மடையனாகத்தான் இருக்க வேண்டும். உன்னோடு பேசவே எனக்குப் பிடிக்கவில்லை. போ, வெளியே!" என்று விரட்டி விட்டான்!

## "பாதி போதும்!"

○ கோஹா ஒரு கூட்டத்தோடு சேர்ந்து கால்நடையாகப் பிரயாணம் செய்துகொண்டிருந்தான். கூட்டத்தினரிடம் உணவுப் பொருள் பற்றாக் குறையாக இருந்தது. ஆனால் கோஹாவுக்கோ பேய்த் தீனி தின்றால்தான் பசி அடங்கும். ஓரிடத்தில் எல்லாரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். கோஹா சாப்பாட்டுக்குப் பறக்காமல் அமைதியாக ஒரு பக்கம் ஒதுங்கி உட்கார்ந்திருந்தான். எப்பொழுதும் பந்திக்கு முந்துகிறவனான கோஹா அன்று அப்படி இருப்பதைப் பார்த்து எல்லாரும் ஆச்சரியப் பட்டார்கள். இருக்கிற உணவைச் சமமாகப் பங்கு வைத்து கோஹாவுக்கு அவன் பங்கைக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார்கள். அந்தப் பங்கில் ஒரு சப்பாத்தியும் ஒரு வேக வைத்த முட்டையும் இருந்தன.



கோஹா சொன்னான்: "எனக்கு வேண்டாம். நீங்களே திருப்தியாகச் சாப்பிடுங்கள். நான் சாப்பிட்டுத்தான் ஆக வேண்டும் என்று நீங்கள் வற்புறுத்தினால் நான் மறுக்கவில்லை. முழுச் சப்பாத்தியையும் முழு முட்டையையும் நான் சாப்பிட்டால் எனக்கு அது ஜீரணம் ஆகாது. ஆகையால் நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் பங்கிலிருந்து ஆளுக்குப் பாதி சப்பாத்தியும் பாதி முட்டையும் பிட்டுக் கொடுங்கள். எனக்கு அது போதும்."

## பூனை எங்கே?

○ ஒரு நாள் கோஹா கசாப்புக் கடைக்குப் போய், "இன்று எங்கள் வீட்டில் ஒரு பண்டிகை. அதனால் நல்ல ஆட்டுக் கறியாகக் கொடு" என்று கேட்டான்.

கடைக்காரன் எலும்பில்லாத ஒரு பெரிய மாமிசத் துண்டை எடுத்துக் கொடுத்தான். அதை வீட்டுக்குக் கொண்டு வந்து மனைவியிடம் கொடுத்து, "இதைக் கறி பண்ணி வை. கொஞ்சம் வெங்காயத்தையும் அதில் நறுக்கிப் போடு. நான் மார்க்கெட்டுக்குப் போய்விட்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு வெளியே போனான் கோஹா

அவன் மனைவியும் ஆட்டுக் கறியைச் சமைத்தாள். அப்போது அவளுடைய தம்பி அங்கே வந்தான். இருவரும் சேர்ந்து ஆட்டுக் கறி முழுவதையும் சாப்பிட்டு விட்டார்கள். கோஹா திரும்பி வந்து சாப்பிட உட்கார்ந்தான். அவனுக்கு ஒரு ரொட்டியையும் ஏதோ ஒரு பழங்கறியையும் கொண்டு வந்து வைத்தாள் மனைவி.

"எங்கே ஆட்டுக் கறி?" என்று கேட்டான் கோஹா.

"அந்த அநியாயத்தை ஏன் கேட்கிறீர்கள்? நான் குளிக்கப் போயிருந்த போது அவ்வளவு கறியையும் பூனை தின்று விட்டது" என்றாள் மனைவி.



கோஹா ஒன்றும் பேசாமல் எழுந்து போய்ப் பூனையைப் பிடித்துக் கொண்டு வந்தான். பூனையைத் தராசில் வைத்து நிறுத்தான். அவன் எத்தனை பலம் ஆட்டுக் கறி வாங்கி வந்தானோ அத்தனை பலம்தான் பூனையின் எடையும் இருந்தது. அதைப் பார்த்த கோஹா மனைவியை நோக்கித் திரும்பி, "திருட்டு நாயே! இது பூனையின் எடை என்றால் ஆட்டுக்கறி எங்கே? இது ஆட்டுக்கறியின் எடை என்றால் பூனை எங்கே?" என்று பெருங் கூச்சல் போட்டான்.

## குட்டி போட்ட சட்டி!

ஒருநாள் கோஹா பக்கத்து வீட்டுக்காரனிடம் போய், "ஆட்டுத் தலையைக் கறி சமைக்க வேண்டும். அதற்கு ஒரு சட்டி வேண்டும். சமைத்த பிறகு சட்டியைத் திருப்பிக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்" என்று சொல்லிச் சட்டியை வாங்கிக் கொண்டு போனான்.

மறுநாள் காலையில் கோஹா அந்தச் சட்டிக்குள் வேறொரு சிறு சட்டியையும் வைத்து இரண்டையும் கொண்டு வந்து பக்கத்து வீட்டுக்காரனிடம் கொடுத்தான்.

"என்ன, இரண்டு சட்டிகள் கொடுக்கிறாய்! நான் ஒரு சட்டி தானே கொடுத்தேன்?" என்றான் பக்கத்து வீட்டுக்காரன்.



"உன்னுடைய சட்டி நேற்றிரவு குட்டி போட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். அதனால்தான் காலையில் எழுந்து பார்க்கும் போது இரண்டு சட்டிகளிருந்தன" என்றான் கோஹா.

பக்கத்து வீட்டுக்காரனும் சந்தோஷத்துடன் இரண்டு சட்டிகளையும் வாங்கி வைத்துக் கொண்டான்.

அன்று சாயங்காலமே கோஹா மீண்டும் வந்து, "உன் இரண்டு சட்டிகளையும் இரவல் கொடுக்க முடியுமா?" என்று கேட்டான்.

அவனும் சந்தோஷமாக இரண்டு சட்டிகளையும் எடுத்துக் கொடுத்தான்.

பலநாட்கள் ஆகிவிட்டன. கோஹா சட்டிகளைத் திருப்பிக் கொண்டு வந்து தரவில்லை. அதனால் பக்கத்து வீட்டுக்காரன் அவனிடம் போய், "கோஹா! எனக்கு என் சட்டிகள் வேண்டியிருக்கிறது. தேவை இருப்பதால் கேட்கிறேனே ஒழிய, மற்றப்படி உன்னிடம் நம்பிக்கையில்லாமல் கேட்கவில்லை" என்றான்.

"எந்தச் சட்டி?" என்று கேட்டான் கோஹா.

"அதுதான் உனக்கு இரவல் கொடுத்தேனே, அந்தக் குட்டி போட்ட சட்டி!"

"அதைக் கேட்கிறாயா? அடபாவமே! நான் என்ன சொல்லட்டும்! அந்தச் சட்டி செத்துப் போய் விட்டதே !"

"என்ன சொல்கிறாய் நீ! சட்டியாவது சாகிறதாவது !"

"நீ என்ன இப்படிக் கேட்கிறாய்? பிறந்ததெல்லாம் சாகத்தானே செய்யும்? குட்டி போடுவதும் சாகக்கூடியதுதானே? நாமும் அல்லாவிடமிருந்து வந்தோம். அவரிடமே திரும்பப் போகப் போகிறோம். இல்லையா?" என்றான் கோஹா.

## "அல்லா அனுப்புவதெல்லாம் உனக்கா ?"

கோஹா தினந்தோறும் காலையில் தன் வீட்டு வாசலில் அமர்ந்து, "ஆண்டவனே ! எனக்கு நூறு பொற் காசுகளை அனுப்பு. நூறு பொற்காசுகள் மட்டும்தான் எனக்குத் தேவை. ஒரு பொற்காசு குறைவாக அனுப்பினாலும் சரி, நான் வாங்கிக் கொள்ள மாட்டேன்" என்று உரக்கச் சொல்லிப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான்.



அடுத்த வீட்டில் குடியிருந்த ஒரு யூதன் அநியாயமான வழிகளில் பெரும் பணம் சம்பாதித்தவன் — கோஹாவின் தினசரிப் பிரார்த்தனையைக் கேட்டு, 'இவன் என்ன இப்படிப் பிரார்த்தனை செய்கிறான்! இவனைச் சோதித்துப் பார்ப்போம்' என்று ஒரு நாள் காலையில் தொண்ணூற்றொன்பது பொற்காசுகளை ஒரு பையில் போட்டுக் கட்டி அதை ஜன்னல் வழியாகக் கோஹாவின் கால் பக்கம் எறிந்தான். கோஹா உடனே குனிந்து அதை எடுத்தான். அதில் உள்ள காசுகளை எண்ணிப் பார்த்தான். "அளவற்ற அருள் கொண்ட ஆண்டவனே ! இதில் தொண்ணூற்றொன்பது பொற்காசுகள்தானே இருக்கின்

றன்? இது எனக்கு வேண்டாம். அடுத்த வீட்டில் ஓர் ஏழை யூதன் இருக்கிறான். யோக்கியன்; பிள்ளை குட்டிக்காரன். இதை அவனுக்குக் கொடுத்து விடுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே யூதன் வீட்டு வாசலுக்குச் சென்று அங்கிருந்தே பணப் பையை உள்ளே எறிந்துவிட்டு அப்பால் போய் விட்டான்.

''ஆஹா! எவ்வளவு நல்லவனாக இருக்கிறான் இந்த கோஜா! இருக்கட்டும்! இவனை இன்னொரு முறையும் சோதித்துப் பார்க்கிறேன்'' என்று சொல்லி யூதன் மறு நாள் காலையில் நூற்று ஒரு பொற் காசுகள் கொண்ட ஒரு பையை கோஜாவின் கால் பக்கம் எறிந்தான். கோஜா உடனே அதைக் கையில் எடுத்து எண்ணிப் பார்த்தான். ஆகாயத்தை நோக்கி, ''அளவற்ற அருளாளனான ஆண்டவனே! நீ கொடுத்ததை நான் பெற்றுக் கொள்கிறேன்'' என்று சொல்லிப் பையோடு வெளியே புறப்பட்டுச் சென்றான்.

யூதனுக்கு இடி விழுந்தது போல் ஆகி விட்டது. அதிவேகமாக கோஜாவைப் பின் தொடர்ந்து ஓடினான். ''ஏய், என் பணப் பையைக் கொடுத்து விடு! என் பணப் பையைக் கொடுத்து விடு!'' என்று கத்தினான் யூதன்.

''அல்லா எனக்கு அனுப்பும் ஒவ்வொரு பணப் பையையுமே உனக்குக் கொடுப்பேன் என்று பார்த்தாயா? அது நடக்கவே நடக்காது. வேண்டுமானால் இதை வைத்துக் கொள்'' என்று சொல்லி ஒரே ஒரு காசை மட்டும் யூதனுக்குக் கொடுத்துவிட்டு நடையைக் கட்டினான் கோஜா.

## அழுத காரணம்!

கொடிய சுபாவம் படைத்த தைமூர் மன்னனுக்கு ஒரு கால் நொண்டி; ஒரு கண்ணும் கிடையாது. மிகவும் விகாரமான முகத் தோற்றம் வேறு. ஒரு நாள் அவன் தலை க்ஷவரம் செய்து கொள்ளப் போனான். கோஜாவும் வந்து அவன் அருகில் உட்கார்ந்து கொண்டான்.



க்ஷவரத் தொழிலாளி ஒரு கண்ணாடியை எடுத்துத் தைமூரிடம் கொடுத்தான். அதை வாங்கிப் பார்த்ததும் தைமூர் கண்ணீர் சொரிந்து அழுதான். உடனே கோஜாவும் கண்ணீர் சொரிந்து அழுதான். இருவரும் மூன்று மணி நேரம் விம்மி விம்மி அழுதார்கள். பிறகு தைமூர் தன் அழுகையை ஒரு வழியாக நிறுத்தினான். கோஜாவோ விடாமல் அழுது கொண்டிருந்தான். இதைப் பார்த்து ஆச்சரியம் அடைந்த தைமூர், ''என்ன சமாசாரம்? நான் என் விகாரமான முகத் தோற்றத்தைக் கண்ணாடியில் பார்த்துவிட்டு, 'இப்படி இருக்கிறதே முகம்!' என்று அழுதேன். இப்போது நானே அழுகையை நிறுத்தி விட்டேன். நீ எதற்கு ஒரு காரணமும் இல்லாமல் விடாப்பிடியாய் அழுது கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான்.

அதற்கு கோஜா, ''சகல லோக சக்கரவர்த்தியே! உங்கள் விகாரத் தோற்றத்தை ஒரு நிமிஷம் கண்ணாடியில் பார்த்ததற்கு நீங்கள் மூன்று மணி நேரம் அழுதால், நாள் முழுவதும் உங்கள் விகாரத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கும் உங்கள் அடிமை எவ்வளவு நேரம் அழவேண்டும்?'' என்று கேட்டான்.

தைமூர் உடனே கோபாவேசம் கொள்ளாமல் கீழே விழுந்து புரண்டு புரண்டு பலமாகச் சிரித்தான்.

**பிறவிப் பிணி நீங்க ...**

கிரேக்க நாட்டில் பண்டைக் காலத்தில் ஒரு நாள் ஒருவன் தன் நாய்க்குட்டியை அடித்துக் கொண்டிருந்தான். அப்போது அந்தப் பக்கமாக வந்த பைதகோரஸ், ''ஓ! அவனை அடிக்காதே! அவன் என் ஆருயிர் நண்பன்! அவனுடைய ஆத்மாதான் இந்த நாய்க்குள் இருக்கிறது!'' என்றார்.

பைதகோரஸைப் பைத்தியம் என்று எண்ணியவர் கிரேக்க நாட்டில் அன்று பலர் இருந்தார்கள். பைதகோரஸும் அவரது கொள்கையைப் பின்பற்றிய பலரும் சொல்லி முடியாத கொடுமைகளுக்கு ஆளானார்கள். ஆனால் பைதகோரஸின் கொள்கைகள் இன்றளவும் உயிர் வாழ்கின்றன. அவருக்குப் பின்னால் வந்த ஞானிகள் ஸாக்ரடீஸும் பிளேட்டோவும் பைதகோரஸின் கொள்கைகளைக் கற்றுணர்ந்து பயன் பெற்றார்கள். பைதகோரஸ் மனிதனுடைய ஆன்மா மறுபிறவி எடுத்துப் பூமிக்கு வருகிறது என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தார். மனிதன் மறு பிறவியின்றி முடிவைக் காணவேண்டுமானால் அவன் இறைவனாக வேண்டும் என்று கருதினார்.

பைதகோரஸின் மதக் கோட்பாடுகள் பல ஹிந்து மதம், பௌத்த மதம் ஆகியவற்றைத் தீர்க்கமாக ஆராய்ந்ததன் விளைவாகப் பிறந்தவை என்று கருத இடம் இருக்கிறது.

— வி. எஸ். ஸங்கடண்கர்

மூன்றாவது பரிசு நாவல்

# மணக்

## அத்தியாயம் 24

"அம்மா! இந்தக் காலத்து எத்தனையோ பெண்களைப் போல, அதுவும் உத்தியோகம் பார்க்கிற பெண்களிலே எத்தனை பேர் இருக்கா, அவர்களைப் போல ஜானு தானாகவே ஒருவனைக் கல்யாணம் செய்து கொள்கிறதுன்னு முடிவுக்கு வந்து விட்டால், உன்னாலே என்ன பண்ண முடியும்? அப்போ அவன்கிட்டே என்னிடம் சொன்னமாதிரி யெல்லாம் பேச முடியுமா...?" என்று கேட்டாள் சீதா.

"நான் பெத்திருக்கிற முத்துக்கள் மூணும் நல்ல முத்துக்கள்னு இது நாள்வரையிலே நெனைச்சுண்டிருக்கேன். ஜானு அது மாதிரி ஏதாவது செய்ஞ்சு வைச்சா, மூணுலே ஒண்ணு சொத்தைன்னு ஒதுக்கிப்பிடறேன். அவ்வளவுதான்....."

"ரொம்ப எளிசா சொல்லி விட்டாய். காலாகாலத்திலே அம்மாவும் அப்பாவும் பார்த்துக் கலியாணம் செய்யாதப்போ, ஒரு பெண் ஒரு பிள்ளையைத் தானாகத்தேர்ந்தெடுத்துக் கொள்கிறதிலே தப்பு இருக்கிறதாக எனக்குப் படவில்லை. ஜானு, நல்ல குடும்பத்திலே பிறந்த ஒரு குணவானைக்கொண்டு வந்துநிறுத்தி, 'இவனை நான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்'னுசொன்னால், நான்மொதல்லே அதை ஆமோதிப்பேன்."

"அப்போ ரெண்டு முத்து சொத்தை யாகும்......"

சீதாவுக்கு எரிச்சல் உண்டாயிற்று.

"நாங்க என்றைக்கும் சொத்தை இல்லை அம்மா. இன்னும் பத்தாம் பசலியாக, பசிச்சவன் பழங்கணக்குப் பார்க்கிறமாதிரி, நீ இன்னும் அந்த நாள் சம்பிரதாயத்திலேயே கண்மூடித்தனமாய் மூழ்கியிருக்காய்



பி.வி.ஆர்

# கோலம்

பாரு. உன் கருத்துத்தான் சொத்தையாயிடுத்து. காலத்துக்கு அனுசரிச்சுண்டு, அதையொட்டி நாம் நீரோட்டத்தோடு போகலேன்னு, எருமை மாடுமாதிரி தேங்கிக் கிடக்கிற குட்டையிலேதான் அழுந்திக் கிடப்போம். இதை நன்னு ஞாபகம் வைச்சுக்கோ!''

''சரி'' என்றாள் பாகீரதி அம்மாள் அமைதியாக.

அம்மாவின் சலனமற்ற முகமும், அமைதியுடன் சொன்ன பதிலும் சீதாவின் ஆத்திரத்தைப் பன்மடங்காக்கின.

''நான் பெரிய முட்டாளாக இருந்து விட்டேன். அந்த ரகுபதியைக் கல்யாணம் செய்து கொண்டு இந்த வீட்டைவிட்டு அந்த நரகமே தேவலேன்னுட்டுப் போயிருக்கணும்....!''

அவளுடைய ஆத்திரத்தைப் பொருட்படுத்தாத பாகீரதி சமையற்கட்டை நோக்கிச் சென்றாள்.

சீதா பிரமை பிடித்தவளைப் போல் வெகு நேரம் கூடத்திலேயே



உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. அம்மா ஆட்சேபிப்பாள் என்பது அவள் எதிர்பார்த்ததுதான். ஆனால் அம்மாவின் மனத்திலுள்ள பிடிவாதம்தான் அவளை அயரவைத்தது. எத்தனையோ விஷயங்களில் அம்மாவுக்கும் அவளுக்கும் மாறுபட்ட கருத்துக்கள் இருந்திருக்கின்றன. ஆனால் அவையெல்லாம் வீட்டுச் செலவைப் பற்றியோ, அல்லது அற்பமான காரியங்களைப் பற்றியோ உண்டான கருத்து வேறுபாடுகள். சம்பாதிக்கிற பெண் சொல்லுகிறாள் என்று அம்மா இறங்கி வந்திருக்கிறாள்.

ஆனால் இது குடும்பத்தில் ஒரு பெரிய காரியம். கல்யாண சமாசாரம். அதுவும் மூத்த பெண் இருக்க, சின்னவளுக்கு நடக்க வேண்டும் என்று ஒரு பிரச்னை. ஜானுவுக்கு முதலில் விவாகம் நடத்துவதில் எத்தகைய தவறும் இல்லை என்று சீதாவின் மனம் நினைத்தது. அவளுடைய கருத்துக்களும் நினைப்பும் அவள் தினம் தினம் கண்டறியும் உலகத்திலிருந்து உதயமானவை. நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்றதான எண்ணம் அவளுடைய எண்ணம்.

ஆனால் அம்மா இன்னும் கர்நாடகமான பழக்க வழக்கங்களிலேயே மூழ்கியிருக்கிறாள். தன் பெண்ணுக்குக் கிடைக்கவிருக்கும் நல்ல காலத்தைப் பற்றிய சந்தோஷத்தைக் காட்டிலும், சமூகம் சிரிக்குமோ என்கிற பயம்தான் அவளிடம் அதிகமாக இருக்கிறது! மூத்தவள் முதலில் மணையில் உட்காராமல், இரண்டாவது பெண் மாலையும் கழுத்துமாக நின்றால், அது குடும்பத்தின் சாபக்கேடு என்று நினைக்கிறாள்! ஒருத்தியின் மனத்தில் இந்த மாதிரி கருத்துக்கள் வேரூன்றியிருந்தால், அவளை எப்படி மாற்ற முடியும்?

நிச்சயமாகச் சீதாவுக்கு அம்மா நினைப்பது போலவோ, எதிர்பார்ப்பது போலவோ அண்மையில் விவாகம் நிச்சயமாகப் போவதில்லை. அடுத்த வருஷம் இன்னும் ஒரு வயது அதிகமாகி விடும் அவளுக்கு. இப்போதே ஏற்ற வரனுக்குச் சிரமமாக இருக்கிறது! அடுத்த வருஷம் எங்கேயிருந்து முளைக்கும்? இப்படியே, நாளும் மாதமும் ஓடி ஓடிப் போக, வயது விஷம் போல் ஏற, இளமையின் முரட்டுத் தனத்தில் சீதாவுக்கு என்ன கிடைக்கும்? அது வரையில் ஜானுவும் காத்துக் கொண்டிருந்து, தானும் இளமையின் மூப்புக்கு வந்து நிற்க வேண்டுமா?

இனிமேல் அம்மாவிடம் கெஞ்சிப் பிரயோசனமில்லை. வெட்டு ஒன்று துண்டு இரண்டாக அவள் பேசி, மேலே நடக்க வேண்டியதுதான். அம்மாவின் அழுகையைக் கண்டு பச்சாத்தாபம் வருவதால்தானே சீதாவால் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடியாமல் போகிறது! ஜானு மட்டும் இசைந்து இணங்கி விட்டால், அம்மா என்ன கத்தினாலும் சரி, நடராஜன் அவளுக்கு மாலையிட்டு விடுவான். இதைச் சீதாவே நடத்தி வைப்பாள். இந்தக் குடும்பத்தில் கஷ்டப்படுவதற்குச் சீதா ஒருத்தி போதும். அடுக்கு அடுக்காக எல்லாப் பெண்களும், கொழு கொம்பு இல்லாத கொடிகள் போலத் தவிக்க வேண்டாம்! கண்டிப்பாக ஜானுவுக்கும், கமலாவுக்கும், சீதாவுக்கு இருந்தது போல புருஷன் வீடு செல்ல வேண்டும் என்ற ஆசை இருக்கும். வேறு வழியில்லாமல்தான் இருவரும் நாட்களைத் தள்ளிக் கொண்டு வருகிறார்கள்.

அதுவும் ஜானுவுக்கு நடராஜனைப் பிடித்து விட்டால், காரியம் முடிந்தது மாதிரித்தான். சீதாவின் கல்யாணத்துக்கு வாங்கியிருக்கும் நகைகளையும் பாத்திரங்களையும் வைத்துக் கொண்டு ஒப்பேற்றிவிடலாம். அம்மாவின் பழைய பித்தளை, வெண்கலப் பாத்திரங்கள் இருக்கவே இருக்கின்றன! கல்யாணச் செலவுக்குச் சந்தானத்தின் காலில் விழுந்து கெஞ்சியாவது வாங்கிக் கொள்ளலாம். மயிலாப்பூரிலேயே ஒரு சத்திரத்தில், சக்திக்கு ஏற்றபடி ஜானுவின் கல்யாணம் நடக்கும். அம்மா அழட்டும், கதறட்டும், கத்தட்டும்! சீதாவுக்குக் கவலை இல்லை. ஓர் எல்லை வரை அவளும் தாயாருக்காக இதுவரையில் அடங்கி யிருந்தாள்! அம்மாவிடம் ஊறிப் போயிருக்கும் கர்நாடகக் கொள்கைகளுக்கு இனி அவள் செவிசாய்க்க வேண்டியதில்லை.

நினைக்க நினைக்க, ஜானுவின் கல்யாணம் நிச்சயம் ஆகிவிட்டதோ என்ற பிரமை சீதாவினுள் எழுந்தது.

ஃ ஃ ஃ

சுமார் ஐந்தரை மணிக்கு வீட்டை அடைந்த ஜானு, ''ஏன் அக்கா நீ ஆபீஸிலேயிருந்து பட்டம் போட்டு வந்துட்டியா? நீ இருப்பாய்னுட்டு நினைச்சு உன் ஸெக்ஷனுக்குப் போனேன்! யூனிவர்ஸிடிக்குப் போக வேண்டியிருந்தது. திரும்பி வர்றப்ப உன்னையும் இழுத்துக் கொண்டு வரலாம்னு.... ஸெக்ஷனு அது...பாதிக்கு மேலே காலி. கடைசியிலே சிவப்பா பரம சாது மாதிரி ஒருத்தன் ஸீட் கொடுத்து உட்காரச் சொன்னான். அவன்கூட ஏதோ ரெண்டு நிமிஷம் பேசிவிட்டு வந்துட்டேன். ரொம்ப

டலண்டா இருந்தான் அவன்....அவன் பேரு...என்னமோ சொன்னானே ஆமா.. நடராஜன் உன்...பேரிலே ரொம்ப மதிப்பு வைச்சிருக்கானே அவன்!''

மூச்சு விடாமல் அவன் பேசிக் கொண்டே போக, பாகீரதி அம்மாள் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டே அங்கே வந்தாள்.

சீதா அம்மாளைக் கவனிக்கவில்லை! ஜானாவும் நடராஜனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு விட்டார்கள் என்று அறிந்த போதே, அவளுடைய மனம் திருப்தியில் விரிந்தது! அபூர்வமாக அவனுடைய ஆபீசுக்கு ஜானா இன்று வந்திருந்தாள் என்றால், அது மனித காரியமே இல்லை! தெய்வ சங்கற்பம்! ஏன், தெய்வ சம்மதமே கிடைத்து விட்டது!

சீதா ஜானாவைப் பார்த்து இலேசாகச் சிரித்தாள்.

அன்று தபாலாபீசிலிருந்து மூன்றே கால் மணிக்கே ஜானா புறப்பட்டாள். போஸ்ட்மாஸ்டர் சிதம்பரத்தின் பிள்ளை எஸ். எஸ். எல்.சி.யுடன் மல்யுத்தம் செய்த பிறகு அதுவும் மெட்ரிகுலேஷன்தான் பெரிய படிப்பு என்று அதில் யுத்தத்தை ஆரம்பித்திருக்கிறான். அது சம்பந்தமாகச் சர்வகலாசாலைக் காரியாலயத்தில் சில விஷயங்களை விசாரிக்க வேண்டியிருந்தது அவருக்கு. பிள்ளை ஊரில் அச்சமயம் இல்லாததால், தபால் நிலையத்தைப் பூட்டிக் கொண்டு இஷ்டம் போலச் செல்ல முடியாத அவர் என்ன செய்வது என்று விழித்தார். பிள்ளையை அனுப்பவோமென்றால், இவர் ஒன்றைச் சொல்லி அனுப்ப அவன் வேறு எதையாவது கேட்டுக் கொண்டு வந்து நிற்பான். [illegible] போகச் சொன்னால், 'நாளைக்குப் போகிறேன் சார்!' என்பான். போஸ்டல் கிளார்க் ரங்கசாமி நாயுடுவுக்கு ஓய்வு இருக்கும்போதெல்லாம், 'திருப்பதி வேங்கடாசலபதி துணை' என்று எழுதிக் கொண்டிருக்க வேண்டும். மேலும் அவருடைய வயசுக்கு அவரை எப்படி அனுப்புவது?

ஜானா ஒரு பெண். அதுவும் வயது வந்த பெண். அவளைத் தம்முடைய சொந்த வேலைக்கு உபயோகித்துக் கொள்ளுவது விவேகமல்ல என்று பட்டது அவருக்கு. ஆனாலும், ஜானா சாமர்த்தியசாலி! ஒரு தடவையில் எல்லாக் காரியங்களையும் முடித்துக் கொண்டு வந்து விடுவாள் என்று அவருக்குத் தெரியும்? ஆனால் எப்படி, அவளை, 'நீ எனக்காகக் கொஞ்சம் சர்வகலாசாலைக்குப் போகிறாயா?' என்று கேட்பது ?

''ஜானா !''

''என்ன ஸார்....!''

''கவுண்டரை க்ளோஸ் பண்ணியாச்சா ?''

''கணக்கா மூணு அடிச்சதும் பண்ணி விட்டேன்.......!''

''காஷ் நிறைய இருக்கா....?''

''ஊஹூம்..... நூற்று நாலு ரூபாயும் சில்லறையும்தான்.....''

'' எனக்குச் சர்வகலாசாலையிலேயே கொஞ்சம் வேலை இருக்கு. இந்தப் பயல் மெட்ரிகுலேஷன் எழுதணுமாம். டுடோரியல் காலேஜிலே கூடச் சேர்ந்திருக்கிறான்....!''

''யாரு, உங்கள் சீமந்த புத்திரனா? இன்னும் எதற்காக அவன் படிப்புக்குப் பணத்தை விரயமாக்குகிறீர்கள்? நான் சொல்கிறதைக் கேளுங்கள். ஏதாவது தொழிலிலே இழுத்து விடுங்கள் அவனை. மெட்ரிகுலேஷன் படிச்சால் இருபத்திரண்டு வயசுக்கு மேலே என்ன செய்ய முடியும்?''

''நான் என்ன செய்யறது....? அவன் அம்மா பிடிவாதமா இருக்கா. என்னமோ செய்யட்டும்னு நானும் விட்டுட்டேன்.''

''சரி, என்ன சொல்லுகிறீர்கள்?''

''சர்வகலாசாலைக்குப் போய்ச் சில சமாசாரங்கள் கேட்டுத் தெரிஞ்சுக்கணும்..... ஆனால் எப்படிப் போறது ?''

''நீ போயிட்டு வர்றியான்னு கேட்கப் போகிறீர்கள். இல்லியா?''

'' அதை எப்படி ஜானா கேட்க முடியும் ?''

''அதான் கேட்டாச்சே. ஆனால் நான் இப்போ போனால், அங்கிருந்து அப்படியே வீட்டுக்குப் போயிடுவேன். திரும்பி இங்கே வரமாட்டேன்.''

''வேண்டாம்!'' என்ற அவர், ''நான் உனக்கு ரொம்பக் கடமைப்பட்டிருக்கேன் ஜானா....!'' என்றார்.

''சரி, சரி. விஷயத்தைச் சொல்லுங்கள். போகிறதோ போகிறேன். சீக்கிரமாவது போகிறேன்.....''

சிதம்பரம் தமக்கு வேண்டிய சமாசாரங்கள் என்னென்ன என்று விவரமாகச் சொன்னார்.

''இவ்வளவுதானே? நீங்க பணத்தை எண்ணி, சரி பண்ணிக் கொள்ளுங்கள்.....''

சிதம்பரம் நிம்மதிப் பெருமூச்சு ஒன்றை விட்டு விட்டு, தமக்காக வெய்யிலில் இறங்கிய ஜானாவையே பார்த்துக் கொண்டு நின்றார்.


ULKA-TT-79 TM

## இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை
**பாரகன்**
**மஹாராணி**
**ராக்ஸி**
**ஜெயராஜ்**
மற்றும்
தென்னாடெங்கும்



பூமகள் புரொடக்ஷன்ஸ்

# பொன்னான வாழ்வு







...தயாரிப்பு...
வி. கே. ராமசாமி
வி. கே. முத்துராமலிங்கம்

...டைரக்ஷன்...
**தேவன்**

ELEGANT

சர்வகலாசாலையில் அவளுடைய வேலை பத்து நிமிடங்களில் முடிந்து விட்டது. அதற்குக் காரணம் அவளுடைய அழகுதானோ என்னவோ? சம்பந்தமில்லாத ஓரிரண்டு இளம் குமாஸ்தாக்கள் போட்டி போட்டுக் கொண்டு அவளுக்குத் தேவையானதை விசாரித்தார்கள். கடைசியில், அவள் சம்பந்தப்பட்ட குமாஸ்தாவிடமிருந்து தகவல்களையெல்லாம் வாங்கிக் கொண்டு திரும்பினாள்.

திரும்பி மெரினா சாலையை அடைந்த போது மணியைப் பார்த்தாள். நான்கு அடித்துப் பத்து நிமிடங்கள். அவள் பஸ் நிலையத்துக்கு வர ஒரு நிமிஷம் இருக்கையில்தான், சாந்தோம் வழியாக அடையாறு செல்லும் பஸ் போயிருந்தது. இனி அடுத்த பஸ் வரக் குறைந்தது இருபது நிமிடங்களாவது ஆகும். மேலும் அந்த பஸ்ஸில் போனால், சாந்தோமில் இறங்கி முக்கால் மைல் நடக்க வேண்டும் வீட்டுக்கு. ஐந்து மணிக்கு அப்புறம் மயிலாப்பூர் வழியாக மந்தைவெளி செல்லும் பஸ்களும், சாந்தோம் வழியாக மந்தைவெளி வரை மட்டுமே செல்லும் பஸ்களும் வரும்!

இருக்கிற முக்கால் மணி நேரத்தைப் பஸ் நிலையத்தில் கடத்துவானேன்? திடீரென்று அக்காவின் ஞாபகம் வந்தது. சற்றுத் தூரத்தில்தான் சேப்பாக்க் கட்டடம் ஒன்றில் அவளுடைய ஆபீஸ் இருக்கிறது. போய்ப் பார்த்தால் என்ன? கிடைத்தால் காண்டீனில் ஒரு கப் காப்பியும் கூடச் சாப்பிடலாம்.

ஆனால் சீதாவின் செக்ஷனில், சூப்பிரண்டெண்டும் இரண்டு மூன்று குமாஸ்தாக்களும் மட்டுமே இருந்தார்கள். சீதாவைக் காணோம். ஒரு வேளை வேலை விஷயமாகப் பக்கத்து செக்ஷன் எதிலாவது இருக்கிறாளோ என்று தலையைத் திருப்பிப் பார்த்தாள். சீதாவை எங்கும் காணோம்.

சூப்பிரின்டெண்ட் மார்க்கசகாயம், மூக்கிலிருந்து நழுவிக் கொண்டிருக்கும் கண்ணாடியை அடிக்கடி இடது கையால் மேலே தள்ளியவராய், தம் வேலையில் மூழ்கியிருந்தார்.

அவருக்கு முன்னால் சில அடி தூரத்தில் ஜானு நிற்பதை அவர் கவனிக்கவில்லை.

அப்போதுதான் செக்ஷனுக்குள் பிரவேசித்த ஓர் இளைஞன், தன் டெரிலின் ஷர்ட்டின் காலரைச் சரி செய்து கொண்டே ஜானு பக்கமாக வந்தான்.

"உங்களுக்கு யாரைப் பார்க்கவேண்டும்?" என்று கேட்ட அவன். அவள் பின்னாலே வரட்டும் என்று எண்ணியோ என்னவோ பக்கத்திலே இருந்த தன் ஸீட்டை நோக்கி நடந்தான்.

அவனுடைய வெள்ளைப் பாண்டையும், க்ரீம் கலர் ஷர்ட்டையும் கவனித்துக்கொண்டே ஜானு, "சீதாவைப் பார்க்கணும்!" என்றாள். அப்போது அவன் அருகே தான் நிற்பதையும் உணர்ந்தாள்.

கைக்கு எட்டிய தூரத்தில் இருந்த ஒரு காலி நாற்காலியைச் சிறிது இழுத்த அவன், "உட்காருங்கள்..." என்றான்.

தன் கேள்விக்கு நேரடியான பதில் இன்னும் கிடைக்கவில்லை என்பதை உணர்ந்த ஜானு, சீதா இன்னும் சில நிமிடங்களில் வந்துவிடுவாள் என்ற எண்ணத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

அவன் உட்கார்ந்ததும், "சீதா இன்னிக்கு அரை நாள் லீவு எடுத்துக் கொண்டு போய்விட்டாள்!" என்றான்.

"அப்படியா?" ஆச்சரியத்துடன் ஜானு எழுந்திருக்க யத்தனித்தாள்.

"கொஞ்சம் இருங்கள்... நீங்கள் சீதாவுக்கு என்ன ஆகணும்?"

"நான் அவளுடைய தங்கை..."

"அதாவது ஜானு! இல்லியா?"

"ஆமாம். என் பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும்? சீதா சொல்லியிருக்கிறாளா?"

"ஆமாம்! ஆனால் என் பெயர் உங்களுக்குத் தெரியாது இல்லியா... என் பெயர் நடராஜன்..."

## சிரப்புஞ்சியில் தண்ணீர்ப் பஞ்சம்

உலகத்திலேயே அதிக மழை பெய்யுமிடம் அஸ்ஸாமிலுள்ள சிரப்புஞ்சி தான் என்பது தெரிந்த விஷயம். ஆண்டொன்றுக்கு 460 அங்குலம் மழை பெய்கிற இடமல்லவா அது? அங்கும் தண்ணீர்ப் பஞ்சம் உண்டென்றால் விந்தையாயிருக்கிறதல்லவா? காரணம் சிரப்புஞ்சியில் பெய்கிற மழையில் ஏறக்குறைய அவ்வளவுமே கோடைக்காலத்தில் பெய்து விடுகிறது. அப்போது தினத்துக்கு 20 மணியும் மழை பெய்து தீர்த்துவிடும். இவ்வளவு மழை பெய்தாலும் சிரப்புஞ்சி மலை உச்சியில் இருப்பதால் தண்ணீரைத் தேக்கி வைக்க முடியாதபடி அவ்வளவும் கீழ் மட்டத்துக்கு வழிந்து விடுகிறது. இதனால் கார் காலத்தில் சிரப்புஞ்சியில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டு விடுகிறது. அச்சமயத்தில் அங்குள்ள மௌஸ்மாய் அருவி முற்றிலும் வறண்டே போய் விட்டிருக்குமாம்.

ஆதாரம்: "ஹிந்து"
(ஞாயிறு சஞ்சிகை)

''ரொம்ப நன்றி... நான் வீட்டி லேயே பார்த்துக் கொள்ளுகிறேன்.''

''ஆட்சேபணை யில்லேன்னு ஒரு கப் காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம். நான் வாங்கிக் கொடுத்து நீங்கள் சாப் பிட்டதாகத் தெரிந்தால் உங்கள் அக்கா கோபித்துக் கொள்ள மாட்டாள்...''

''இதிலே கோபித்துக்கொள்ள என்ன இருக்கு? நானே காண்டீனில் போய்ச் சாப்பிட்டுக் கொள்ளுகிறேன்...''

''காண்டீனுக்கா? நீங்கள் போவா னேன்... பியூனை அனுப்பறேன்...''

''பரவாயில்லே, வருகிறேன்!'' என்று கூறி விட்டு ஜானு வெளியேறினாள்.

நடராஜனும் எழுந்து வராந்தாவரை அவளுடன் வந்து வழி அனுப்பினான்.

**வீ**ட்டை ஜானு அடைந்து அன்று நடந்ததை யெல்லாம் கூறின பிறகு, சீதா, ''ஜானு, இன்னிக்கு நான் உன் கிட்டே முக்கியமான சமாசாரம் ஒன்று பேசணும்.... ரகசியம் கூட'' என்றாள்.

''முதல்லே டிபன் காப்பி சாப்பிட ணும்!'' என்றாள். பிறகு, ''கமலா எங்கே?'' என்று கேட்டாள்.

''சினிமாவுக்குப் போயிருக்கிறாள்.''

''அவளுக்கு வேறு என்ன வேலே!'' என்று முணுமுணுத்துக் கொண்டே புடவை மாற்றச் சென்றாள் ஜானு.

சுமார் இருபது நிமிடங்களுக்குப் பிறகு சீதா மெதுவாக ஆரம்பித்தாள்.

''ஜானு! நான் மனசிலே ஒண்ணு நெனச்சிண்டிருக்கேன். அது தப்பில் லேன்னும் மனச்சாட்சி சொல்றது. ஆனால் அதை நிறைவேத்திக்கிறது உன் னுடைய முடிவிலே இருக்கு...''

''விஷயத்துக்கு வா, அக்கா...''

''நீ சீக்கிரம் கல்யாணம் பண்ணிக் கொள்ளணும்...''

''பூ! இதைச் சொல்றதுக்குத்தானா இத்தனே ஆர்ப்பாட்டம் பண்ணினே?''

''ஏன், அதிலே இஷ்டமில்லேயா..''

''மொதல்லே உனக்கு ஆகட்டும்.''

''எனக்கு ஆகாது.''

''அப்படீன்னு யார் சொன்னா?''

''நானேதான்...''

''என்ன உளறுகிறாய்? ஏதோ அசம் பாவிதம் நடந்துடுத்துன்னு இடிஞ்சு போயிட்டாயே? இதெல்லாம் வாழ்க் கையிலே சகஜம்டீ...''

''நீ என்ன வேணும்னாலும் சொல்லு. எனக்குக் கல்யாணம் தேவையில்லே.''

''அப்போ என் கல்யாணத்துலே அவ்வளவு என்ன அக்கறை?

''நானும் நீயும் ஒண்ணா?''

''இல்லே.... நீ ஒரு படி மேலே... மொதல்லே நீதான் மணையிலே உட் காரணும். ஏன், அம்மா அந்தக் காரி யத்தைச் செய்யலேன்னு, நானே உட் கார்த்தி வைப்பேன்.. ஆமாம் ஏன் இப்படித் திடீர்னு மூளே போயிருக்கு?''

''உனக்கு இருபத்து மூணு வய சாச்சு...''

''இன்னிக்குத்தான் தெரியுமா?''

''உனக்கும் அடுத்தபடியாகக் கமலா வுக்கும் கல்யாணமாகி விட்டால்....''

''உன் ஜன்மம் சாபல்யமடைஞ்சுடு மாக்கும். இதோ பார், அக்கா. சில சமயத்திலே நீ பரப்பிரும்மம் மாதிரி உட்கார்ந்து கொண்டு, இந்த உலகமே உன் மண்டை உச்சியில்தான் விழுந்து கெடக்குன்னு நினைக்க ஆரம்பிச்சுடறே. முதல்லே நீ உன் வாழ்க்கை முறையை மாத்திக்கணும். வெய்யிலிலே காஞ்ச வடாமும் அப்பளாமும் மாதிரி நீயே உன்னை ஆக்கிக் கொள்வதில் யாருக்கு என்ன புண்ணியம்? நாம் ஏழை. ஆனால் அதைப் பறை கொட்டிக் கொண்டு நாலு பேருக்குத் தெரிய ஆடுவானேன்? வேணுமென்றே அழுக்கைக் கட்டிக் கொண்டு, மலிவான நூல் புடவையும் கோலமுமா ஆபீசுக்குப் போறாய். நாலு நல்ல புடவையைத் தினமும் தோய்த்துத் தோய்த்து இஸ்திரி போட் டுண்டு நீ போ. அதுவும் பச்சை, நீலம், சிவப்பு என்கிற கலர்லே இருந்தால் உன் வயசு மூணோ நாலோ குறைஞ்ச மாதிரி உனக்கே தோணும். வாழ்க்கை யிலே இயற்கையா உற்சாகம் கிடைக் கல்லேன்னு, நாம அதை உண்டாக்கிக் கொள்ளணும்...''

''என்னடி, நான் ஏதோ சொல்லிக் கொண்டு வரேன்...''

''நீ பிரஸ்தாபிப்பதற்குக் காரணமே உன் மனப் போக்குத்தான். திடீர்னு ஒரு ராத்திரி படுக்கையிலே எழுந்து உட்கார்ந்து, 'இனிமே எனக்கு வாழ்வு கிடையாது. அது அஸ்தமிச்சாச்சு' என்று ஜபம் பண்ண ஆரம்பிச்சிருக்கே. நான் சொல்கிறதைக் கேளு. இந்த மாதிரி இராதே. எதிலும் அக்கறையா யில்லாமே, யார் சொன்னாலும் கேக் காம, தனக்குத்தானே செய்யாத குற்றத்துக்குச் சூடு போட்டுக்கொள் கிறவளைப் போல் இருக்கிறதிலே நீ யாருக்கும் என்ன உபகாரமும் செய்த வளாகிவிட மாட்டாய்...''

''அதெல்லாம் போகட்டுமடி. உனக் குக் கல்யாணம் பண்ணிக்கொள்ள விருப்பமில்லேயா?''

''யார் சொன்னார்கள்? கண்டிப்பாப் பண்ணிக் கொள்ளத்தான் போறேன். நான் என்ன மணிமேகலேயா, இல்லே புத்தபிட்சுணியா?'' (தொடரும்)

# ஆறு வருடங்கள்

ருக்மிணி பார்த்தசாரதி





"இவர்தான் மிஸ்டர் தாஸ். மனோதத்துவ வைத்தியர்!" என்று யாரோ அறிமுகப் படுத்தியவுடனேயே சங்கரன் சட்டென்று தீர்மானித்து விட்டார். "உங்களை தான் பார்க்க வேண்டும். எப்போது வரலாம்?" என்று கேட்டார்.

"என்ன விஷயமாக?" என்று வினவினார் தாஸ்.

"எனக்கே சரியாக விளங்கவில்லை. என் மகனைப் பற்றிய பிரச்னை. அவன் நடந்து கொள்ளும் விதம் எனக்குப் புரியாத புதிராக இருக்கிறது. ஒருவேளை உங்களால் எனக்கு உதவ முடியுமா என்றுதான்..."

"நாளைக் காலை ஒன்பது மணிக்கு வந்து விவரமாகச் சொல்லுங்கள்!" என்று தாஸ் தம்முடைய 'விஸிட்டிங் கார்ட்' ஒன்றைக் கொடுத்தார்.

மறுநாள் எட்டரை மணிக்குப் போய்க் காத்திருந்தார் சங்கரன். அவர் மனத்து ஆவல் அவருக்கல்லவா தெரியும்! அவருடைய மகன், பதினாறு வயது நிறைந்த அழகான பையன், அழகிருக்கிறது, அறிவிருக்கிறது — அவரிடம் அன்பு மட்டும் ஏன் இல்லாமல்போய்விட்டது?

சரியாக ஒன்பது மணிக்கு தாஸ் அவரை வரவேற்றுத் தம் அறைக்கு அழைத்துப் போனார்.

"சரி... சொல்லுங்கள்..."

"என் மகன்..."

"பெயர்?"

"விஜயன்!"

"அழகான பெயர்!.. எந்த வகுப்பில் படிக்கிறான்?"

"பள்ளியில் கடைசி வருஷம்...மார்ச்சில்— அதாவது இரண்டு மாதங்களில் — எஸ். எஸ். எல். ஸி. எழுதப் போகிறான்."

"உங்கள் வேதனை?"

அவர் ஒரு கணம் தயங்கிவிட்டு "அவன் என்னை வெறுக்கிறான்!" என்று நெஞ்சடைக்கக் கூறினார்.

புருவங்களை உயர்த்தித் தாழ்த்தினார் தாஸ். "ஏன்?"

"அதுதானே தெரியவில்லை!"

"வீட்டில் பையனுக்கு ஏதாவது மனத் தாங்கல்கள் உண்டா? சகோதர சகோதரிகளோடு போட்டி, பொறாமை, இப்படி..."

"இல்லை...அவன் என்னுடைய ஒரே மகன். ஒரே குழந்தை..."

தாய் இருக்கிறாளல்லவா?"

"இருக்கிறாள்."

"சொந்தத் தாயார்தானே?"

"அவனைச் சுமந்து பெற்றவள்தான்."

"உம்... அவன் உங்களை வெறுக்கிறான் என்கிறீர்களே, அதை இன்னும் கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்கள்."

துயரம் தெறிக்கும் விழிகளோடு தாஸைப் பார்த்துவிட்டு, எச்சிலைக் கூட்டி விழுங்கிவிட்டுச் சொல்லலானார் சங்கரன்; "என் மகன் என்னை வெறுக்கிறான். ஏனென்று எனக்குத் தெரியவில்லை. என் மனச்சாட்சிக்குத் தெரிந்து நான் அவனுக்கு எந்தக் குறையும் வைக்கவில்லை. நான் பணக்காரன் இல்லைதான். ஆனால் அவன் பணக் கஷ்டத்தை அறியாத படிதான் வளர்த்தேன். அவன்மேல் நான் உயிரையே வைத்திருக்கிறேன், டாக்டர்... ஆனாலும் அவன் என்னை வெறுக்கிறான்..."

"உம்..."

"வீட்டில் அவன் தாயாரோடு சரளமாகப் பேசிக் கொண்டிருப்பான். பள்ளியில் நடந்ததையெல்லாம் சொல்லி ஆசிரியர்களைப்பற்றி ஹாஸ்யம் அடித்துச் சிரித்துக் கொண்டிருப்பான். நான் வீட்டுக்குள் நுழைந்தவுடனேயே பட்டென்று பேச்சை நிறுத்தி விடுவான். முகம் கல்லாய் உணர்ச்சியற்றுவிடும். கண்கள் மட்டும் என்மேல் படும்போதெல்லாம் நச்சுப் பாம்பைக் கண்டது போல் பயத்தையும் வெறுப்பையும் கொட்டும்..."

"உம்..."



''அவன் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது நான் சாப்பிட நுழைந்தால் அப்படியே கையை உதறிவிட்டு எழுந்து விடுவான். 'நில்; வா, இங்கே!' என்று நான் அதட்டினால் எதிரே வந்து நிற்பான். 'ஏன் போகிறாய்?' என்றால் பதில் வராது. 'ஊமையா நீ? பதில் சொல்லேன்?' என்று பொறுமை இழந்து நான் கத்தினால்கூடப் பதில் பேச மாட்டான். கோபத்தில் நான் கை ஓங்கி அறைந்தும் இருக்கிறேன். அப்போதும் மௌனம்தான். அவன் என் தோளுக்கு மிஞ்சிவிட்டான். மிஸ்டர் தாஸ்! தோழனாய்த் திகழ வேண்டாமா? எதிரியைப் போல் ஏன் என்னை வெறுக்கிறான்?''

''இந்த வெறுப்புத்தான் உங்கள் பிரச்னையா?''

''அது என் வேதனை... நேரடியான பிரச்னை இன்னொன்று இருக்கிறது...''

''சொல்லுங்கள்.''

''விஜயன் புத்திசாலிதான். ஆனால் பரீட்சைகளில் நன்றாக எழுதுவதில்லை. முப்பத்தைந்து மார்க் வாங்கி எப்படியோ பாஸ் செய்து விடுகிறான். அவனுடைய பள்ளித் தலைமை ஆசிரியர் என்னை அழைத்து, 'உங்கள் பிள்ளை வகுப்பில் மிக மிக நன்றாகப் பாடங்களைக் கவனித்துப் படிக்கிறான். கேட்ட கேள்விகளுக்கு உடனே சரியாகப் பதில் சொல்கிறான். சிக்கலான கணக்குகளைக் கூட கஷ்டமில்லாமல் போட்டு விடுகிறான். ஆனால் பரீட்சையில் அரைகுறையாகத்தான் விடை எழுதுகிறான். கவனக் குறைவான பிழைகள் ஏராளம். ஏன் இப்படி என்று விசாரியுங்கள்!' என்றார். நான் விசாரித்தேன். வாயைத் திறந்து பதில் சொன்னால் தானே? என்னை வருத்தப்படுத்த வேண்டும் என்பதற்காகத்தான் அவன் இப்படியெல்லாம் செய்கிறான் என்றுகூட எனக்குத் தோன்றுகிறது. அது எப்படியோ! விஜயன் எஸ். எஸ். எல். ஸி.யிலாவது சரியாக எழுதுவானோ என்ற கவலையில் நான் தவிக்கிறேன், மிஸ்டர் தாஸ்... கல்வியைத் தவிர வேறு எந்தச் செல்வத்தையும் என்னால் என் மகனுக்குக் கொடுக்க முடியாதே! நான் பணக்காரன் இல்லையே!''

சற்று நேரம் மௌனம் நிலவியது. மிஸ்டர் தாஸ் முதலில் பேசினார். ''சரி, நாளைக்கு லீவு நாளாயிருக்கிறது. விஜயனை நான் பார்க்கலாமா?''

''அழைத்து வருகிறேன்...''

''இல்லையில்லை. நீங்கள் அழைத்து வரக் கூடாது. அவனுடைய தாயாரோடு அவனை அனுப்புங்கள். அவனோடு அவன் சகஜமாகத்தான் பேசுகிறான் இல்லையா?''

''ஆமாம்.''

''இன்னொரு விஷயம். நான் மனோதத்துவ டாக்டர் என்று விஜயனிடம் சொல்ல வேண்டாம். அவனுடைய தாயாரின் குடும்பத்தை அறிந்த நண்பன் என்று அவள் வாயால் சொல்லி அழைத்துவரச் செய்யுங்கள்...''

''சரி, டாக்டர்.''

சங்கரன் விடை பெற்றுக் கொண்டார்.

மறுநாள் தம் அறைக்குள் நுழைந்த விஜயனைக் கண்டு தாஸ் பிரமித்துப் போனார். எவ்வளவு அழகான தோற்றம்! சந்தன மாநிறம். உலகின் விந்தைகளைப் பருக அவலோடு இங்குமங்கும் தாவும் ஒளிமயமான இரு விழிகள். கம்பீரமான மூக்கு. எடுப்பான வாய். தலை கொள்ளாத கேசம் அவன் குணத்தின் பிரதிபிம்பம் போல் பிடிவாதமாக நெற்றியில் புரண்டது. தன் தாயின் கரத்தை அன்போடு பற்றியவாறு உள்ளே நுழைந்தவன், ''நமஸ்காரம் சார்!'' என்று அவரை வணங்கினான்.

''நமஸ்காரம், விஜயன்! என்ன, சௌக்யமா அம்மா?'' என்று அவன் தாயை விசாரித்துவிட்டு மிக மிகச் சாதாரணமாக ''சங்கரன் வரவில்லையா?'' என்றார் தாஸ்.

உடனே விஜயன், ''அவர் எதற்கு? அம்மாவுக்கு நான்தான் துணையாக வந்தேன்!'' என்று அன்பின் அற்புத எழில் முகமெல்லாம் பரவ, தன் தாயைப் பார்த்தான்.

''பஸ்ஸிலா வந்தீர்கள்?''

''அப்பாவானால் பஸ்ஸில்தான் அம்மாவை அழைத்து வந்திருப்பார். பாவம், காத்துக் காத்து அவளுக்குக் கால் வீங்கியிருக்கும். நான் அப்படியா! அம்மா இங்கே வரவேண்டும் என்று சொன்னவுடன், என் கைப் பணத்தை எடுத்துக் கொண்டு 'ஜாம் ஜாம்' என்று அவளை டாக்ஸியில் அலுங்காமல் குலுங்காமல் நலுங்காமல் அழைத்து வந்தேன்!''

தாஸ் ஏதோ வெளிச்சம் கண்டுவிட்டவர் போல் தாயையும் மகனையும் மாறி மாறிப் பார்த்தார். பின், விஜயனின் பக்கம் திரும்பி, ''விஜயன்! நீ இங்கே என் பக்கத்தில் வருகிறாயா, உன் அம்மா அந்தச் சோபாவில் உட்காரட்டும். 'குஷனு'ம் போட்டிருக்கிறது. மின் விசிறிக்குக் கீழும் இருக்கிறது! அவளுக்குச் சௌகரியமாக இருக்கும்!'' என்றார்.

''சரி சார்!'' என்று உடனே எழுந்து அவரருகே வந்தான் விஜயன். ''நீ சோபாவுக்கு வா அம்மா!'' என்று உற்சாகத்தோடு கூறிவிட்டுக் கண்களில் சிநேக பாவத்தோடு தாயைப் பார்த்தான்.

''உனக்கு இது கடைசி வருஷம் இல்லையா விஜயன்?''

''ஆமாம் சார்!''

''வெகு சிறப்பாகப் பாஸ் செய்துவிடுவாய் நீ! அப்புறம் உன் அப்பா அம்மாவுக்கு வேறு என்ன வேண்டும்? பூரித்துப் போய்விடுவார்கள்!''

''அம்மா சந்தோஷப்படுவாள்... ஆனால் ஒன்று சார்! நான் பெயிலானால்கூட அம்மா திட்ட மாட்டாள். அப்பாதான் குடிமுழுகிப் போனதுபோலக் கத்துவார்! என்னை அடித்தாலும் அடிப்பார்!''

''ஆனால் நீ பெயிலாகி வைத்துவிடாதேயப்பா! 'உன் பிள்ளையின் புத்தியைப் பார்!' என்று உன் அம்மாவையும் சேர்த்துத் திட்டப் போகிறார்!'' என்றார் தாஸ்.

விஜயன் சட்டென்று ஏதோ புது உண்மையைப் புரிந்து கொண்டவன் போல அவரைப் பார்த்தான். பின் தன் அன்னையின் பக்கம் திரும்பி, ''நீ பயப்படாதே அம்மா! நான் நிறைய மார்க் வாங்கிடுவேன். சந்தோஷத்தில் அப்பா உனக்குப் பட்டுப் புடவை வாங்கித் தருவார்!'' என்றான்.

விஜயன் அதற்கு மேல் அதிக நேரம் தங்கவில்லை. ''போக வேண்டும் சார். உடனே வீட்டுக்குப் போனால்தான் அம்மா கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ள முடியும்!'' என்று கூறியவாறு எழுந்தான்.

''என் காரில் போய் இறங்கிக் கொண்டு காரை அனுப்பிவிடு. நான் டிரைவரிடம் சொல்கிறேன்!'' என்றார் தாஸ்.

''ரொம்ப நன்றி ஸார்! வா அம்மா! உனக்குக் களைப்பே இருக்காது!'' என்று அவன் தன் தாயாரருகே போய் நின்று கொண்டான். ''வரட்டுமா சார்!''

''போய் வா. பரீட்சையில் முதலாகப் பாஸ் பண்ணியதும் எனக்கு ஸ்வீட் கொண்டு வர வேண்டும். ஞாபகம் இருக்கட்டும்!'' என்று அவர்களுக்கு விடையளித்தார் தாஸ்.

மறுநாள் சங்கரனை மட்டும் வரச் சொன்னார் தாஸ். முகத்தில் நிரந்தரமாகக் குடிகொண்டு விட்ட கவலைகளோடு எதிரே வந்தார் சங்கரன்.

''மிஸ்டர் சங்கரன்! இப்போது நான் கேட்கப்போகும் கேள்விகள் மிக மிக முக்கியமானவை. நன்றாக யோசித்துவிட்டு முழு பதில் தரவேண்டும் நீங்கள்!''

''சரி!''

''விஜயன் உங்களை வெறுக்கிறான் என்று சொன்னீர்களே, அந்த வெறுப்பு முதலிருந்தே இருந்ததா?''

''ஐயோ, இல்லை டாக்டர். அவன் குழந்தையாக இருந்தபோதெல்லாம் என்னோடு ஒட்டிக் கொண்டிருப்பான். ஒரு சின்னக் கையால் தன் தாயையும் மற்றொன்றால் என்னையும் பிடித்துக் கொண்டு சிரித்துச் சிரித்து எங்களையும் சிரிக்க வைப்பான். சட்டென்று அவன் போக்கே மாறிவிட்டது...''

''எந்த வயது வரை இப்படி அன்பாயிருந்தான்?''

''ஒன்பது... பத்து ....''

''சட்டென்று ஒரு நாளில் மாறிவிட்டானா? இல்லை, மெதுவாக...''

''எனக்கே சரியாகத் தெரியவில்லை மிஸ்டர் தாஸ்! 'இப்போதெல்லாம் விஜயன் சிரிப்பதில்லை' என்று நான் நினைத்ததுண்டு. 'வளருகிற பையன் இல்லையா? அதுதான் குழந்தைத்தனமாகச் சிரிப்பதில்லை!' என்று ஆறுதல் கூறிக் கொள்வேன். எப்போதாவது என்னைக் எதிர்பாராமல் — அதாவது தெருவில், கடையில், விளையாட்டு மைதானத்தில் — கண்டுவிட்டால் பயந்தாற்போல் கூசுவான். இதைக்

# ·:·பாஸ்·:·போமின்

# சக்தியை அதிகரிக்கிறது.



# பசியைத் தூண்டுகிறது.



# வலிவைப் பெருக்குகிறது.

# நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

**சுருங்கச் சொன்னால்—
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ·:·பாஸ்·:·போமின்**




·:·பாஸ்·:·போமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும்,
பலவகை கிளிஸரோ·:·பாஸ்பேட்டுகளும் அடங்கிய,
பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக.

SQUIBB® TTT® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும்.
காரம்சந்த் ப்ரேமசந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS

Shilpi SC 50 A /67 Tam

*

# சுத்தமான தேன்!

நூற்றுக்கு நூறு சுத்தமான குடகுத் தேன். 450 கிராம், 225 கிராம் பாட்டில்களில் கிடைக்கும். சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட அக்மார்க் முத்திரையுடன் ஸ்பென்ஸர் கம்பெனியாரால் பாக் செய்யப்பட்டது.

**ஸ்பென்ஸர் & கம்பெனி லிமிடெட்**
**153, மவுண்ட் ரோடு, மதராஸ்-2.**




# உங்கள் சருமத்தை சுத்தமாக வையுங்கள்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் மாக மாறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப் பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப் பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

# பருக்கள், கருப்பு மச்சங்கள், வேர்க்குரு மற்றும் சிறு சரும நோய்களுக்கு




# நிகோ

## கிருமிநாசினி சோப்

நிகோ, நம்பகமான மதிப்புடைய முதன்மையான கிருமிநாசினி சோப்பாகும். நிகோ உங்களுக்கு மூன்று வகையில் பயனளிக்கிறது—சுத்தமாக்குதல், கிருமிநீக்குதல், பாதுகாத்தல்—உங்கள் சருமத்தைச் சுத்தமாகவும், ஆரோக்கியமாகவும், பருக்கள், கருப்பு மச்சங்கள் மற்றும் இதர சிறு சரும உபாதைகளிலிருந்து பாதுகாத்து, பத்திரமாகவும் வைத்திருக்கிறது. மேலும், நிகோ சோப் தேய்த்துக் குளித்தால், வேர்க்குருவில் இருந்து சுகமான நிவாரணம் பெற்று, புத்துணர்ச்சி அடையலாம்.





ஒவ்வொரு நாளும், உங்கள் சருமத்திற்குத் தேவையான பராமரிப்பை அளிக்கத் தவறாதீர்கள்.

**நிகோ** — ஒரு பார்க்-டேவிஸ் தயாரிப்பு

HAS 5585

கூட நான் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. பின் மெள்ள மெள்ள நான் அருகில் வந்தால் விலகிப் போக ஆரம்பித்தான். 'வாடா ராஜா!' என்று ஒரு தடவை நான் அணைத்தபோது என் ஸ்பரிசமே அவனைச் சுட்டுவிட்ட மாதிரி அதிர்ந்து கைகளை விலக்கிக்கொண்டு ஓடுகிறான். 'அவன் பெரியவனாகி விட்டான்' என்றுதான் அப்போதுகூட நினைத்தேன். அவன் கண்களில் வெறுப்பையும் ஏதோ கோபத்தையும் ஒரு வருஷமாகத்தான் கவனித்து வருகிறேன்.''

''.... நான் இப்போது ஒரு கேள்வி கேட்கப் போகிறேன். இதை அதிகப்பிரசங்கித்தனமாக நினைக்கக் கூடாது.''

''கேளுங்கள், மிஸ்டர், தாஸ்!''

''எப்போதாவது நீங்கள் உங்கள் மனைவியை மூர்க்கத்தனமாக அடித்ததுண்டா?''

''என்னது?''

''ப்ளீஸ்... ப்ளீஸ்.... கோப்படாமல், யோசித்து விடை தாருங்கள்....''

''உண்டு!'' என்று விடை நிதானமாக வெளி வந்தது.

''கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்கள்!''

''அது கோடைக்காலம். எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஏனென்றால் நான் ஊர் வாங்கிவரப் போயிருந்தேன். என் மனைவி அஜாக்கிரதையாக வீடு திறந்தது திறந்தபடி இருக்க, அடுத்த வீட்டுப் பெண்ணோடு பேசிக் கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் அவசரம் அவசரமாக வந்தாள். உள்ளே வந்தால் வெள்ளித் தட்டு, டம்ளர்களைக் காணோம்; கொடியிலிருந்த புடவைகளைக் காணோம்! 'பட்டப் பகலில் பேச்சு சுவாரசியத்தில் எத்தனை பொருள்களைக் கோட்டை விட்டுவிட்டாள் இவள்!' என்று எனக்கு என் மனைவி மீது அசாத்தியக் கோபம். கை சோர்ந்து விழும்வரை அவளை அடித்தேன். தவறு தன்னுடையது என்று அறிந்தவள் வாயைத் திறக்கவில்லை....''

''அப்போது விஜயனுக்கு என்ன வயதிருக்கும்?''

''உம், சுமார்....'' ஒரு கணம் யோசனையின் பின், ''ஒன்பது....பத்து'' என்றவாறு சட்டென்று ஆவலோடு நிமிர்ந்து வைத்தியரைப் பார்த்தார் சங்கரன். அவரோ ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அறையில் மௌனம் நிலவியது. நிமிடங்கள் கரைந்தன.

''மிஸ்டர் சங்கரன்...''

''உம்...?''

''உங்களுக்கு இப்போது இரண்டு பிரச்னைகள். ஒன்று, விஜயன் நல்லபடியாக பாஸ் செய்ய வேண்டுமே என்ற கவலை. இன்னொன்று அவன் மறுபடியும் பழையபடி உங்களிடம் அன்பு செலுத்த மாட்டானா என்ற ஏக்கம்.... சரிதானா?''

''சரிதான்...''

''உடனடியாக நாம் கவனிக்க வேண்டியது முதல் பிரச்னை. இதற்கு ஒரு வழி சொல்கிறேன். கவனமாகக் கேளுங்கள்!''

''சொல்லுங்கள் டாக்டர்!''

''விஜயன் இருக்கும் சமயமாக நான் உங்கள் வீட்டுக்கு வருவேன். இருவரும் பேசிக் கொண்டிருப்போம் — விஜயனுக்குக் கேட்கும்படி. அவன் பெயிலாகிவிடுவான் என்று நீங்கள் சொல்லுங்கள். சிறப்பாகப் பாஸ் செய்வான் என்று நான் சொல்கிறேன். நூறு ரூபாய் பந்தயம் கட்டுங்கள்...''

''இதனால் என்ன லாபம்?''

''இதனால் அவன் பாஸாகிவிடுவான். இது போதாதா? பந்தயம் வெறும் பேச்சுக்காகத் தான்!''

''எனக்குச் சரியாகப் புரியவில்லையே!''

''ஏனோ உங்களை அவன் வெறுக்கிறான். அதனால் நீங்கள் நஷ்டப்பட்டால் அவன் மகிழ்வான். ''அப்பாவை வருத்துகிறோம்' என்ற உள்ளுணர்வு அவனை நன்றாகப் படிக்கத் தூண்டும்.''

''சரி!'' சங்கரனின் குரல் ஈனஸ்வரமாய் வெளிவந்தது.

மாதங்கள் மறைந்தன. பரீட்சை முடிவு வெளியாகி விட்டது. விஜயன் பள்ளியிலேயே முதலாவதாகப் பாஸ் செய்துவிட்டான்.

கையில் லட்டு உருண்டைகளோடு தானைப் பார்க்க வந்தான் விஜயன். ''சார்! நான் பாஸ் சார்! அம்மாவுக்கு என்ன சந்தோஷம் தெரியுமா? அப்பாவுக்குத்தான் நூறு ரூபாய் நஷ்டம்!'' என்று கலகலவென்று சிரித்தான்.

## சிக்கனத்துக்கு வழி காட்டும் கோடீசுவரர்கள்

மிகவும் சிக்கனமாயிருப்பதற்கு வழி காட்டுபவர்கள் மிகப் பெரிய பணக்காரர்கள்தான்.

உலகத்திலேயே முதற் பெரும் செல்வந்தர் ஜே. பால் கெட்டி என்ற பெட்ரோல் ஊற்றுச் சொந்தக்காரர் என்று சொல்ல இடமுண்டு. இவருக்கு வருகிற கடிதங்களில் போதிய தபால் தலை ஒட்டாதிருப்பின், அதற்கான கட்டணத்தைச் செலுத்தி இவர் கடிதத்தைப் பெறுவதில்லையாம். அது என்ன முக்கியமான விஷயமாக இருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் கடிதத்தை வாங்க மறுத்து விடுவாராம்.

பால் கெட்டி உலகின் முதற்பெரும் பணக்காரர் இல்லாவிடில் ஹெச். எல். ஹண்ட் தான் அந்தப் பெருமைக்கு உரியவராக இருப்பார். இவரும் ஒரு பெட்ரோல் ஊற்றின் அதிபர். நம் நாட்டின் ஏழைத் தொழிலாளிகூட எவர்ஸில்வர் டிபன் பாத்திரத்தில் உணவு எடுத்துச் செல்லும் இந்த நாளில் ஹெச். எல். ஹண்ட் தம் காரியாலயத்துக்கு உணவு எடுத்துச் செல்வது எதில் தெரியுமா? ஒரு சாதாரண சாணித் தாள் பையில் தான்.

ஆதாரம்: நியூ யார்க் டைம்ஸ்
நியூஸ் சர்வீஸ்

ஒரு லட்டை விண்டு சுவைத்தவாறே அவர், "ஹூஹூம்! நூறு ரூபாய் இல்லை, இருநூறு ரூபாய்!" என்றார்.

"எப்படி?"

"பந்தயத்தில் தோற்றது நூறு. உன் அம்மாவுக்கு நூறு ரூபாய் பட்டுப் புடவை. ஆக, இருநூறு!"

"என்ன! அம்மாவுக்குப் பட்டுப் புடவை வாங்கிறீரா அப்பா? ஏதேது! நூல் புடவைக்குக்கூட மூக்கால் அழுவாரே!"

"நீ பாஸான மகிமை அது!"

"அம்மா பட்டுப் புடவை கட்டிக் கொண்டால் அப்படியே ராணி மாதிரி இருப்பாள்!" என்று சொல்லிப் பூரித்தான் விஜயன்.

விஜயன் சென்று சிறிது நேரத்துக்கெல்லாம் சங்கரன் வந்தார். முகத்தில் பழைய சோகம், வேதனை.

"என்ன மிஸ்டர், சங்கரன்! பிள்ளை முதல் தரமாகத் தேறி விட்டான். உங்கள் முகம் அழுது வழிகிறதே!" என்றவாறு லட்டு நிறைந்த தட்டை அவர் முன்னும் தள்ளி வைத்தார் தாஸ்.

"என் வெறுப்பினால்தானே, அவன் மனம் வைத்துப் படித்துப் பாஸ் செய்திருக்கிறான்! இதை நினைத்தால் வேதனைப்படாமல், மகிழவா முடியும்?"

"இந்த வேதனை உபயோகமற்றது. அன்பத்தை நினைத்து அழுவது வியர்த்தமானது. அந்தத் துன்பத்திலிருந்து நிவாரணம் பெறும் வழியை ஆராய்வதுதான் புத்திசாலித்தனம். உங்கள் மகன் ஏன் உங்களை வெறுக்கிறான், தெரியுமா?"

"தெரியாதே!"

"நீங்கள் அவன் தாயாரைத் துன்புறுத்துவதால்!"

"என்ன! நான் என் மனைவியைத் துன்புறுத்துகிறேனா? இது அபாண்டம்!" என்று சங்கரன் அலறி விட்டார்.

"அபாண்டமாயிருக்கலாம். ஆனால் விஜயன் இதை உண்மை என்று நம்புகிறான்!"

"மிஸ்டர் தாஸ்! நான் அன்பை வெளியில் காட்டத் தெரியாத மனிதன். 'உன் மேல் எனக்கு அன்பு!' என்று சொல்வதையே மிகையாக, போலியாக, எண்ணுகிறவன். என் மனைவியை நான் நெஞ்சம் நிறைந்த அன்போடு நேசிக்கிறேன்."

"இது போதாது, சங்கரன்! உங்கள் 'கேஸில்' இது போதாது. விஜயனின் குணத்துக்கு இது போதவே போதாது. பிள்ளைக் குழந்தைகள் தாயை அதிகமாக நேசிப்பது உலகமறிந்த உண்மை. விஜயனோ தன் தாயாரை நேசிப்பதோடு மட்டுமல்லாமல் பக்தியோடு பூஜிக்கிறான். அப்படியிருக்க கை ஓய்ந்து விழும் வரை அவன் கண் முன்னே அவளை அடித்த உங்களை அவன் வெறுப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது?"

"என் வாழ்நாளில் நான் அவளை அடித்தது அந்த ஒரு தடவைதான், டாக்டர்! அப்படி அடித்தது தவறுதான்."

"அவன் தாயாரை நீங்கள் நேசிக்கிறீர்கள் என்பதை அவனுக்கு நிரூபிக்க வேண்டும். பதினைந்துப் பையனின் வளர்ச்சி பெறாத உள்ளத்தில் அன்று படிந்த அதிர்ச்சி நாளடைவில் தேய வேண்டும்."

"எப்படி?"

"உங்களுக்கு அவன் தாயாரின்மேல் அன்பு என்பதை வெளிப்படையாக, அடிக்கடி காட்டுங்கள். அவளைப் புகழ்ந்து பேசுங்கள். அவளுக்காகப் பழம், பூ, துணிமணி என்று வாங்கித் தாருங்கள். அவளுடைய ஆழ்ந்த அழகை வர்ணித்துப் பூரிப்படையுங்கள். அவள் சமைக்கும் உணவைப் புகழுங்கள். என்றாவது சமையல் நன்றாக அமையாவிட்டால், 'உனக்கு வேலை அதிகம். அதனால் தான் இப்படி ஆகிவிட்டது. பரவாயில்லை. யானைக்கும் அடி சறுக்காதா?' என்று சமாதானம் கூறுங்கள்."

"சரி, டாக்டர்."

"ஒன்றை மட்டும் நீங்கள் உணர வேண்டும். பத்து வயதுச் சிறுவன் ஒரு நாள் கண்ட கொடிய காட்சி அவன் பிஞ்சு உள்ளத்தை முதலில் தைத்து, பின் அச்சத்தை மூட்டி, இப்போது வெறுப்பின் இருப்பிடமாக்கியிருக்கிறது. இதற்கு ஆறு வருட காலம் தேவைப்பட்டது. இது போலவே, இந்த வெறுப்பு மறைந்து, அச்சம் நீங்கி, மனம் பழையபடி நிர்மலமாய் மாறுவதற்கும் ஆறு வருட காலம் பிடிக்கலாம். அது வரை நீங்கள் பொறுமையாக இருக்க வேண்டும். அன்பின் வழி என்றென்றும் வெற்றி பெற்றுத்தான் ஆகும் என்று திடமாக நம்ப வேண்டும்....."

"சரி, டாக்டர்.....!"

சங்கரனின் முகம் மெள்ள மெள்ளத் தெளிவாயிற்று. "டாக்டர்! மனத்துப் பாரம் சட்டென்று இறங்கி விட்டாற்போல் தோன்றுகிறது. ஏனோ?" என்றார்.

"இது விஜயனைப் புரிந்து கொண்டதனால் ஏற்படும் இன்பம். நிஜத்தில் இதில் முழுமையில்லை. ஆறு வருடங்களுக்குப் பிறகு உங்கள் மனைவியோடும் மகனோடும் என்னைச் சந்திக்க வாருங்கள். அந்த இன்பம் பூரணம் பெற்றிருக்கும். அது வரையில் நான் காத்திருக்கிறேன்."

"உங்கள் பீஸ், டாக்டர்!"

"ஆறு வருடங்களுக்குப் பிறகு தாருங்கள். அப்போது இன்பம் பொங்க நீங்களும் தருவீர்கள், அதே இன்பத்தோடு நானும் பெற்றுக் கொள்வேன்....."

"அப்படியே!" சங்கரன் தம் எதிரிலிருந்த லட்டு ஒன்றை விண்டு வாயில் போட்டுக் கொண்டார். "ஆகா! என்ன ருசி பார்த்தீர்களா?" என்றார்.

"உங்கள் மகன் கொண்டு வந்த பண்டமாயிற்றே!"

"அதனாலில்லை. என் மனைவி செய்த பண்டமாயிற்றே?" சங்கரன் சிரித்தார்.

தாஸும் சிரித்தவாறு சங்கரனின் முகத்தைப் பார்த்தார். அதில் ஒரு நிறைவு...அந்த நிறைவின் சிகரமாக ஒரு காட்சி அவர் கற்பனையில் விரிந்தது. இருபத்திரண்டு வயது வாலிபன் விஜயன் தன் தாயோடும் தந்தையோடும் அன்பின் அழகோடும் அவரைப் பார்க்க வருகிறான்.

அந்தக் கற்பனையில் லயித்துப் போனார் டாக்டர் தாஸ்.



திருவட்டீஸ்வரர் சபா காரியதரிசி, திரு **ஜி. முத்து** அவர்களுக்கும், சௌபாக்கியவதி **சுலோசனா**வுக்கும் சமீபத்தில் திருச்சானூரில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

## பல்சுவைப் பக்கம்!

## பிளாஸ்டிக் செங்கல்!

நூரம்பர்க்கில் செங்கல் தயாரிப்பிலும் புரட்சி ஏற்பட்டிருக்கிறது. அதுதான் போரடோன் செங்கல் எனப்படும் செங்கல். கன்டன் என்ஜினியர் கண்டுபிடித்த முறையின் அடிப்படையில் ஜெர்மனியில் இப்புதுமைச் செங்கல் தயாரிக்கப்பட்டுச் சோதனை செய்யப்பட்டு வருகிறது. களிமண்ணும், பிளாஸ்டிக் நுரையும் கலந்து இச்செங்கல் தயாரிக்கப்பட்டிருக்கிறது. எடை குறைவாக இருந்தாலும் இவை சேதம் இன்றி, பெரும் அழுத்தத்தைத் தாங்கிக் கொள்ளக் கூடியவை. இவற்றை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்கு எளிதில் கொண்டு செல்லலாம். கட்டுமானச் செலவும் குறைவு. இச்செங்கற்களை பலவிதங்களில் அளவைக் குறைத்துக் கொள்ளலாம். செங்கல்லின் இடையில் துவாரம் இருப்பதால் கட்டிடத்தினுள் கால நிலை சீராக இருக்கவும் உதவுகிறது.

யூ. பி. எஸ்.

## தராசு!

**மகாகவி பாரதியார் தமது ''தராசு'' என்ற நூலுக்கு எழுதிய முகவுரையிலிருந்து ஒரு பகுதி:**

இவ்வுலகமே ஈசன் ''விளையாட்டு''. உலகத்தை அறிய வேண்டுமானால் விளையாட்டுப் பழக்கமும் வேண்டும்... எழுதும் விஷயங்களுக்கு என்ன மகுடம் ஏற்படுத்தலாமென்ற யோசனை உண்டாயிற்று. பலவிதமான செய்திகளையும் கலந்து பேச நேரிடுமாதலால் ''பலசரக்குக் கடை'' என்ற மகுடமெழுத உத்தேசித்தேன். அது விளையாட்டாக முடியுமாதலால் விட்டுவிட்டேன். எனக்கும் ஒரு செட்டியாருக்கும் சிநேகம். அவரைப்போல் நாம் ஒரு பலசரக்குக் கடை வைத்தால் அவருக்குக் கோபம் ஏற்படுமென்று கருதி அந்த மகுடத்தை விலக்கினேன்..... 'தராசு' என்று பொதுப்படையாகப் பெயர் வைத்திருக்கிறேன். எல்லா வஸ்துக்களையும் நிறுத்துப் பார்க்கும் எல்லாச் செட்டியாருக்கும் இதனால் உதவியுண்டு. எந்தச் செட்டியாரும் நம்மிடம் மனஸ்தாபங்கொள்ள இடமிராது.

எடுத்தெழுதியவர்: வாசுதேவன்





## வர்த்தகனும் பணப்பையும்

செல்வம் மிகுந்த ஒரு வர்த்தகன் ஒரு சமயம் தனது பணப் பையைத் தவற விட்டு விட்டான். அந்தப் பையில் இரண்டாயிரம் ரூபாய் இருந்ததாயும், அதைக் கண்டெடுத்துக் கொடுப்பவருக்கு அந்தப் பணத்தில் பாதியை அளிப்பதாயும் அவன் அறிவித்தான்.

ஒரு தொழிலாளியின் கையில் அந்தப் பை அகப்பட்டது: அவன் அதை வர்த்தகனிடம் கொண்டு சென்றான். வர்த்தகன் தான் விளம்பரம் செய்திருந்தபடி பெருந்தொகையை இனாமாகக் கொடுக்க மனமில்லாமல், பையின் பணத்துடன் அரிய இரத்தினம் ஒன்றும் இருந்ததாகச் சொல்லிப் பாசாங்கு செய்தான்.

'நான் உனக்குப் பணம் தர முடியாது. பையிலிருந்த இரத்தினத்தையும் கொண்டு வந்து கொடுத்தால் நான் ஆயிரம் ரூபாயையும் உனக்கு அளிப்பேன்!' என்று அவன் சொன்னான்.

தொழிலாளி நீதித்தலத்தில் வழக்குப் பதிவு செய்தான். நீதிபதி வர்த்தகனைப் பார்த்துப் பின் கண்ட முறையில் வாதம் செய்தார்.

'பையில் இரண்டாயிரம் ரூபாயும், ஓர் இரத்தினமும் இல்லை. ஆகையால் இது உன் பையாக இருக்க முடியாது. ஆகவே இதன் சொந்தக்காரர் யாரென்று தெரியும் வரையில் இது தொழிலாளியிடமே இருக்கட்டும். நீ பணமும் இரத்தினமும் தவறிப் போனதை இன்னும் விளம்பரம் செய். ஒரு வேளை உன் பையும் அகப்படலாம்!'

வர்த்தகன் மேற்கொண்டு விவாதம் செய்யாமல் தொழிலாளிக்கு ஆயிரம் ரூபாயைக் கொடுத்து விட்டுத் தன் பையை வாங்கிக் கொண்டான்.

— ''டால்ஸ்டாயின் நீதிக் கதைகள்'' லிருந்து எம். ஆர். பாஸ்கரன் எடுத்தெழுதியது.



## கல்கியின் நகைச்சுவை!

பல்சுவைப் பக்கம் 2

கல்கி அவர்களின் பேச்சு மக்களைக் கவர்ந்ததற்கு முக்கிய காரணம் அதிலே இழையோடிய நகைச்சுவை தான். அந்த நகைச்சுவையும் முன்கூட்டியே தயாரித்துக்கொண்டு போனதல்ல; அந்தத் தருணத்தில் சூழ்நிலைக்கு ஏற்ப, அவர் கற்பனையிலே உருவானதால் அதன் மதிப்பும் பொருளும் கூடுதலாகி நிற்கும்.

பிரவசனத்துக்கு ஒரு தடவை பிரவசன கர்த்தா மிகவும் காலதாமதமாக வந்து சேர்ந்தார். அதற்குக் காரணமும் சொன்னார். 'என்னுடைய குறிப்புப் புத்தகம் இல்லாமல் நான் எங்கும் போவதில்லை. இன்று மறந்து வீட்டில் வைத்து விட்டு வந்து விட்டேன். பாதி தூரம் வந்தபிறகு ஞாபகம் வரவே, வீடு திரும்பி அதை எடுத்துக் கொண்டு வரும்படியாகி விட்டது.' இப்படிக் கூறிய பிறகு கதை நடத்தினார். இறுதியில், ''இன்று கதை சொன்னவர், கேட்டவர்கள் எல்லோருக்கும் ரொம்பப் புண்ணியம் செய்திருக்கிறோம். சொர்க்க பதவி நிச்சயம் உண்டு'' என்றார். இதன்பிறகு கடைசியாகக் கல்கி பாராட்டுரை வழங்க எழுந்தார்: ''நாமெல்லாம் சொர்க்கத்துக்குப் போகிறோமோ இல்லையோ, பிரவசனம் செய்த புண்ணியவான் நிச்சயம் சொர்க்க பதவியை அடைவார். அப்படி அவர் சொர்க்கத்துக்குப் போகும்போது மறந்துவிடாமல் ஞாபகக் குறிப்புப் புத்தகத்தை உடன் எடுத்துச் செல்ல வேணும். சொர்க்கத்தை நோக்கிப் பாதித் தூரம் போன பிறகு திடீரென்று நினைத்துக்கொண்டு வீடு திரும்ப முடியாதல்லவா?'' — ''சுடர்'': இ. ராஜேந்திரன் எழுதிய ''ஸ்தாபனமாக விளங்கிய தனி மனிதர்'' கட்டுரையிலிருந்து. பிரசுரம்: சுடர், தில்லித் தமிழ்ச் சங்கம், புதுதில்லி, விலை: 40 காசு.



# பாமன்னன் பாரதி!

புதுயுகத்தை விழைந்தபெரு புதற்கவிஞன் யாரே?
போகத்தைக் கொன்றுவிட புனைந்துநின்றோன் யாரே?
புதுமைப்பெண் நினைப்படைத்துப் போற்றிசெய்தோன் யாரே?
பூணுறுக் கடிமைசெய்யப் போதித்தோன் யாரே?
புதிர்தானைக் களைமுறுக்க போக்கித்தோன் யாரே?
புன்னவன்பாற் கனலேற முறையிட்டோன் யாரே?
பதக்கூட்டிற் சக்தியின்பேற் பாடியவன் யாரே?
பாமன்னன் சுப்பிரமண்ய பாரதியேன் பாரே!

அந்நியராய்க் குயிற்பாட்டை அமைத்துயர்ந்தோன் யாரே?
அன்பென்ற முரசொலிக்க அறிவித்தோன் யாரே?
கந்காட்டிற் கண்ணன்பேற் கவிபுனைந்தோன் யாரே?
காக்கையோடும் உறவுகொண்ட கவிவல்லோன் யாரே?
விந்செய்து காக்குமுறை விளம்பியவன் யாரே?
வித்தகநற் சிவர்நாடி விளக்கியவன் யாரே?
பதுத தாயமதைப் பகர்ந்தோவிந்தோன் யாரே?
பாமன்னன் சுப்ரமண்ய பாரதியேன் பாரே!

பாரதத்தை வாழ்விக்கப் பண்ணிசைத்தோன் யாரே?
பாவித்தல் பொய்யென்ற பாதைசொன்னோன் யாரே?
வாரிது பாரதத்தை வாழ்த்தியவன் யாரே?
வந்தனைசெய் வோமென்று வகையுரைத்தோன் யாரே?
விரகதந் திரவாழ்வை வேண்டியவன் யாரே?
வெய்யபகை வனுக்கதுன விரும்பியவன் யாரே?
பாரேபவ வாழாத பலம்கேட்டோன் யாரே?
பாமன்னன் சுப்பிரமண்ய பாரதியேன் பாரே!

என்.எஸ்.சிதம்பரம்

# மாணவர்களை வசப்படுத்திய ஸ்டேஷன் மாஸ்டர்



கொந்தளித்துக் கொண்டிருந்த மாணவர் சமூகத்தைத் தம் சாதுர்யத்தினால் சமாளித்து விட்டாராம் இந்த ஸ்டேஷன் மாஸ்டர்....... அவர் பாராட்டுப் பெறுவதற்குக் கேட்பானேன்?

○●○

ஒவ்வோர் ஆண்டும் ரயில்வே இலாகாவினர் கொண்டாடும் 'ரயில்வே வார விழா'வின்போது சிறப்பாகப் பணிபுரியும் ரயில்வே சிப்பந்திகளைக் கௌரவிப்பது வழக்கம். தட்சிண ரயில்வேயைச் சேர்ந்த ஒரு தலைமை நிலைய அதிகாரி, அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு பெருமையை இவ்வாண்டில் அடைந்திருக்கிறார். தஞ்சாவூர் சந்திப்பில் தலைமை நிலைய அதிகாரியாக இருந்து சமீபத்தில் ஓய்வு பெற்ற திரு என். கோவிந்தராஜுலு அவர்கள்தான் அந்தப் பெருமையைத் தட்டிக் கொண்டு போனவர்!

ரயில் கால அட்டவணையில் மாறுதல் வேண்டும் என்று கல்லூரி மாணவர்கள், கிளர்ச்சி செய்தார்கள். கிளர்ச்சி வலுவடைந்து, தஞ்சாவூர், நீடாமங்கலம் பகுதியில் ரயில் போக்குவரத்து ஸ்தம்பிக்கும் நிலையை அடைந்து விட்டது. சென்ற டிசம்பர் மாதத் தொடக்கத்தில் ஐந்து நாட்களுக்கு அந்தப் பிரிவில் ரயில் வண்டிகள் ஓடவில்லை. மாணவர்களின் போராட்டம் இன்னும் பலம் பெற்று நிலைமை பின்னும் மோசமாகும் போலிருந்த சமயத்தில் தஞ்சை நிலைய அதிகாரியாக இருந்த திரு கோவிந்தராஜுலு தம்முடைய அசாதாரண சாமர்த்தியத்தினால் நிலைமையைக் கட்டுக்கு உள்ளாக்கினார். கல்லூரி அமைந்திருக்கும் குடிகாடு என்ற சிறிய நிலையத்துக்கும் தஞ்சாவூருக்குமிடையே தனி இஞ்ஜினில் பிரயாணம் செய்து மாணவர்களைக் கண்டு பேசினார். ரயில்வே உயர் அதிகாரிகளிடம் நிலைமையை எடுத்துக் கூறிச் சமரசத்துக்கு வழிகோலினார்.

'ரயில்வே நிர்வாகம், ரொக்கப் பரிசு அளித்துத் தங்களைக் கௌரவித்ததாமே?' என்ற கேள்விக்கு, முப்பத்தேழு ஆண்டுகளாக ஸ்டேஷன் மாஸ்டராகப் பணியாற்றிய திரு கோவிந்தராஜுலு அடக்கத்தோடு பதில் கூறினார்.

''என் வாழ்நாளிலேயே மறக்க முடியாத சம்பவம் அது. பரிசுத் தொகை என்னவோ குறைவுதான். அது, எந்தக் காரணத்துக்காக அளிக்கப்பட்டது என்பதுதான் முக்கியம்.''

''கொந்தளித்துக் கொண்டிருந்த மாணவர் சமூகத்தை நீங்கள் எவ்வாறு வசப்படுத்தினீர்கள்?''

''முதலாவது மாணவர்கள் குற்றவாளிகள் என்ற மனப்பான்மையில் நான் அவர்களை அணுகவேயில்லை. அவர்கள் உணர்ச்சி வசப்பட்டு, தெளிவில்லாத காரணத்தால் ஒரு மொர்ச்சியை ஆரம்பிக்கலாம். எனவே, எடுத்த எடுப்பிலேயே அவர்களிடம் அதிகாரத்தைக் காட்டுவதும், குற்றவாளிகளைப் போல் நடத்துவதும் கூடாது.

''நூற்றுக்கணக்கான மாணவர்கள் முன் நான் ஒருவனாகவே நின்று பேசியபோது, என்னுடைய மாணவ நாட்களை மனத்தில் வைத்துக் கொண்டே பேசினேன். மாணவர்களின் ரயில் நிறுத்தப் போராட்டத்தினால் பொதுமக்களுக்கு எவ்வளவு அசௌகரியங்கள் ஏற்படுகின்றன என்பதை அவர்கள் மனத்தில் பதியும் படி விளக்கினேன். நான், அவர்களுடைய நண்பனாக, நலம் கோருபவனாக, நின்று பேசியதால் என் வார்த்தைகளுக்கு மதிப்புக் கொடுத்தார்கள். அதற்காக மாணவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.''

''அப்படியானாலும் ரயில் வண்டிகளின் காலத்தைப் பொதுமக்களின் நலனுக்கிணங்க மாற்றவே முடியாதா?''

'முடியும்' என்கிறார் திரு கோவிந்தராஜுலு. ரயில்வே உப



யோஜிப்போர்களின் பிரதேச ஆலோசனைக் குழுக்கள், டிவிஷனல் ஆலோசனைக் குழுக்கள் முதலியவற்றின் யோசிசன்படிதான் ரயில் வண்டிகளின் காலங்கள் நிர்ணயிக்கப்படுகின் றன. ஆகவே, மாணவர்களின் பிரதிநிதிகள், இந்தக் குழுக்களின் அங்கத்தினர்களைச் சந் தித்துச் சட்டபூர்வமாய், சமாதானமாய்த் தேவையான மாறுதல்களைச் செய்துகொள்ள லாமாம்.

பொறுப்பு வாய்ந்த பதவியில் வெகு நீண்ட காலம் பணிபுரிந்துள்ள திரு கோவிந்த ராஜுலுவின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் எவ்வளவோ உண்டு. எனினும் அவருடைய சேவை மனப்பான்மையையும், உண்மை ஊழியத்தையும் எடுத்துக்காட்ட இரண்டு நிகழ்ச்சிகளே போதும். 1942ம் ஆண்டு. உலகப் போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்த சமயம். திரு கோவிந்த ராஜுலு, அப்போது சென்னை கடற்கரை ஸ்டேஷன் கேபினில் அலுவலில் இருந்தார். இரவுப் பணி. அபாயச் சங்கு அலறியது. எல்லாச் சிப்பந்திகளும் விமானத் தாக்குதலி லிருந்து தப்பித்துக் கொள்வதற்காக



ஷெல்டரில் அடைக்கலம் புகுந்து விட் டார்கள். இவரும் மேஜைக்கடியில் பதுங்கிக் கொண்டார். தலைக்கு மேல் ஜப்பான் விமா னங்கள் பறந்தன. ரயில்வே தலைமைக் காரி யாலயத்திலிருந்து டெலிபோனில் கடற்கரை ஸ்டேஷனைத் தொடர்பு கொள்ள முயன் றார்கள்; முடியவில்லை. கேபினைக் கூப்பிட்ட தும் இவர் வெளியே வந்து சுற்றுப்புறத்தில் நடப்பவைகளை உடனுக்குடன் தெரிவித்து வந்தார். தம் உயிரைப் பற்றிக் கவலைப்படா மல் பணியாற்றிய இவரை ரயில்வே நிருவாகம் மெச்சிப் பாராட்டியது.

அடுத்த சம்பவம், 1952ல் விழுப்புரத்தில் நடந்தது. பெரும் புயலினால் ரயில் வண்டிக ளெல்லாம் நின்றுவிட்டன. நூற்றுக் கணக் கான பிரயாணிகள் பிளாட்பாரத்தில் தங்கித் தத்தளித்துக் கொண்டிருந்தார்கள். திரு கோவிந்தராஜுலு இரவு பகல் பாராமல் எல்லா உதவிகளையும் பிரயாணிகளுக்குச் செய்து எல்லோரது நன்மதிப்பையும் பெற்றார். ரயில்வேச் சிப்பந்திகளும் இவரை ஒரு முன்மாதிரி எனலாமன்றோ?

— டி. எஸ். கே.

# பஞ்சாமிர்தம்



"இந்தத் தனிப்பு குறித்து ஏற்பட்ட வாக்குவாதத்தில் உதவிப் பிரதமர் திரு மொரார்ஜி தேசாயைத் தலைகுனியச் செய்து சென்னை திரும்பிய ராஜ்ய சட்ட மந்திரி திரு மாதவனுக்கு விமானகூடத்தில் மாணவர் குழுவினர் மாலைகள் அணிவித்தனர்."

—செய்தி

"மாலை போட்டுக்கொள்ள நேர்ந்தபோது எப்படியும் திரு மாதவனும் தலைகுனியத் தானே வேண்டியிருந்தது!" என்று சொல்லி மொரார்ஜி தேசாய் சமாளித்துக் கொள்ளலாம்!

ஃ ஃ ஃ

"ஒரு பெண் தனது தோழிகளின் உதவி யுடன் 'கெராவ்' போராட்டம் செய்து இளைஞர் ஒருவரைக் கல்யாணம் செய்து கொண்டுவிட்டாள்!"

—கோழிக்கோடு செய்தி

திருமணத்துக்கு முன்னதாகவே சில ருடைய மணவாழ்க் கையில் போராட்டம் ஆரம்பமாவதும் உண்டு போலும்!



ஃ ஃ ஃ

வனவிலங்கு வாரத்தின் போது, கிண்டி குழந்தைகள் பூங்காவிலுள்ள யானைமீது சிறு வர்கள் இலவச மாகச் செல்ல லாம். -செய்தி



"இன்றைக்கு வனவிலங்கு வாரம் இல்லை. இறங்குடா கீழே!" என்று ஒரு தகப்பனார் தனது முதுகிலுள்ள வாண்டுப் பய லுக்குக் கூறுவது காதில் விழுகிறது!

ஃ ஃ ஃ

டெலிபோன் பில் பாக்கியைச் சீக்கிரம் கொடுப்பவர்களுக்கு 'ரிபேட்' அளிக்கலாமா என்று அரசாங்கம் ஆலோசனை செய்து வருகிறது.

— செய்தி

'அதே மாதிரி சீக்கிரம் ரிசீவரைக் கீழே வைப்பவர்களுக்கும் ஒரு சலுகை அளிப்பீர் களா?' என்று கத்துகிறார் பொது டெலிபோன் அருகே நிற்கும் ஒரு மனிதர்.



# பொறுங்கள்!

**துணிகள்
சீக்கிரமே உடுக்க
தகுதியற்றதாய்
போவதைப்பற்றி
கவலைப்படுகிறீர்களா?**

கவலையை விடுங்கள். டுவின் டஸ்கர் துணிகளை வாங்குங்கள். இந்த ரக துணிகள் உங்களுக்குப் பிடிக்கும் ... உறுதியானவை, நீடித்து உழைப்பவை. அதி நேர்த்தியாய் தயாரிக்கப்பட்டவை. விலையிலும் நயமானவை. இவை எல்லாம் மதுரை மில்ஸாரின் பெரிய அளவு உற்பத்தி சௌகரியங்களால் சாத்தியமாகின்றன. ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்—டுவின் டஸ்கர். நயமான விலையில் தரமுள்ள துணிகள்.

**ஹார்வி**



## டுவின் டஸ்கர்

பாப்ளின் • டிரில் • லாங்கிளாத்

**நயமான விலையில் தரமுள்ள
துணிகள்**

மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,
மதுரை.
மானேஜிங் ஏஜண்டுகள்:
ஏ. & எப். ஹார்வி லிமிடெட்



மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்

# பயர்ஸ்டோன் டயர்களின் அகலப் பரப்பினால் உங்களுக்குக் கிடைக்கும் உத்தரவாதம்-முன்னைவிட




## மேலும் சிறந்த நிலைப்புறுதி!

பயர்ஸ்டோன் கார் டயர்களிலுள்ள வியப்பூட்டும் 'ராப்-அரவுண்ட்' டிரெட் டிசைன் முன்னைவிட 18 சதவீதம் கூடுதலான அகலமுள்ளதால்—அதிக பரப்பளவு ரப்பரை சாலையில் பதியச் செய்கிறது. இது காரணமாக திடீர் திருப்பங்களிலும் மூலைகளிலும்கூட கழுவுதலோ, வழுக்குதலோ அறவே இருப்பதில்லை. விஷயங்களை சீர் தூக்கிப் பார்க்கும்போது நீங்கள் கவனிக்க வேண்டிய அம்சம் 'சூப்-ர்-டஃப்' என்ற விசேஷ ரப்பராகும். இது ஒவ்வொரு பயர்ஸ்டோன் டயருக்குள்ளுமடங்கி, அதிக மைல்கள் ஓடச் செய்கிறது. ஒரு டயருக்கு இது பெரிய சாதனையன்றோ!

**Firestone**

பயர்ஸ்டோன் "ராப்-அரவுண்ட்" டிரெட் கூடிய டீலக்ஸ் சாம்பியன் டயர்

பயர்ஸ்டோன் உங்களுக்கு தரம், உழைப்பு இவைகளின் சின்ன

# பாரம் சுமக்கும் பள்ளிப் பிள்ளைகள்

பரலி சு. நெல்லையப்பர்



பள்ளிக்குச் செல்லும் நம் பிள்ளைகள் - பெரும்
பாரம் சுமந்து செல்கின்றார்
பள்ளியில் நடக்கும் படிப்பு கொஞ்சம் - சுமக்கும்
பாரமோ மிக அதிகம்

கொள்ளையான புத்தகங்கள் மிக,
கொள்ளையான நோட் புக்குகள்
கள்ள மில்லாச் சிறுபிள்ளைகள் - தோளில்
கனத்த பாரம் சுமக்கின்றார்

ஓடி ஆடித் திரியும் மக்கள் - தோளில்
ஒரு டன் பாரம் சுமக்கின்றார்
பாடி உம்மை வேண்டுகிறேன் - இந்தப்
பரிதாபத்தைச் சிந்தியுங்கள்

இடது தோளில் பெரும் பாரம் - சிறுவர்
இருதயத்தை பாதிக்கும்
உடல் நூல் வல்லார் ஆராய்ந்து - நமக்கு
உண்மை கூற வேண்டுகிறேன்

பெற்றோர் இதனைச் சிந்திக்க - நம்
பெரியோர் இதனைச் சிந்திக்க
கற்ற நமது மந்திரிகள் - உடனே
கருத்தோ டிதனைச் சிந்திக்க

பணிவோடும்மை வேண்டுகிறேன் - நம்
பாலர்க்காக வேண்டுகிறேன்
கனிவோடும்மை வேண்டுகிறேன் - நீர்
கருணை செய்ய வேண்டுவனே.

# அண்ணன் தந்த ஆசைப்பரிசு!

விமலா ரமணி

இரவெனும் கரிய பாம்பு பகலவனின் ஒளியை விழுங்கி விட்டது போலும். காணாமல் போன பகலவனைக் கண்டுபிடிக்க இந்த நட்சத்திரக் கும்பலால் முடியுமா? விளக்கை ஏற்றி அணைத்து இவை போடும் வெளிச்சத்தினால் உலகுக்கு ஒளியூட்டி விடமுடியுமா?

நிலா தனக்குள் சிரித்துக் கொண்டாள். பரவாயில்லை. கற்பனை நன்றாகத்தான் ஓடுகிறது. கதைகூட எழுதலாம் போலிருக்கிறதே! நினைவுகள் நெஞ்சிலே உரம் பெற்று முழுமையாவதுதானே கதை! அவளுக்கும் முழுமை உணர்வுகள் தோன்றும்போது கதை தானே பிறக்கிறது.

இன்றும் செல்வத்தைக் காணவில்லை. மாலை மணி ஏழுக்கும் மேலாகிவிட்டது. இனிமேலா வரப் போகிறான்?

நெடிய பெருமூச்சு அவள் இதயத்திலிருந்து புறப்பட்டது. அவள் சிந்தனையுள் மூழ்கினாள்.

மனிதர்களுக்குக் கடவுளால் அளிக்கப்படும் இந்த வாழ்க்கை ஒரு வரப்பிரசாதமா? அல்லது சாபமா? இன்பத்தில் உழலுபவர்களுக்கு அது வரமாகவும், துன்பத்தில் நலிபவர்களுக்கு அது சாபமாகவும் காட்சியளிக்கிறது போலும்! அவளைப் பொறுத்தவரையில் அவள் வாழ்க்கை மலரவில்லை. ஆனால் அது மொட்டாகவும் இல்லை.

இதழ் விரித்துச் சிரிக்கும் பருவம்.

அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள் மெல்ல. ஆனால் அந்த மகிழ்வின் தெறிப்பு முகம் முழுதும் மலராய் விகசித்து நின்றது.

அந்தத் தெறிப்பிலே...?

செல்வமும், அவளும் எப்பொழுது சந்தித்துக் கொண்டார்கள்?

ஆ, நன்றாக நினைவிருக்கிறது.

அவன் ஒரு நாடக நடிகன். அவள் ஒரு ரசிகை.

இது போதாதோ? தென்றல் காற்றிலே தவழ்ந்து சிரித்த மொட்டு மலராய் விரியக் காத்திருந்தது.

அன்றுதான் வந்தான். வந்ததுதான் வந்தான், எப்படி இருந்தது அவன் தோற்றம்?

செக்கச் செவேல் என்று வெந்த அந்த மேனியில், அலைந்ததால் ஏற்பட்ட வியர்வைத் துளிகள் இங்கும் அங்கும் பனித்துளிகளாய்ப் படர்ந்து நின்றன.

ஆவி பட்டதால் படர்ந்து சூழ்ந்து கொண்ட வெண் புகை பிடித்த கண்ணாடியாய் அவன் முகம் காட்சி தந்தது.

அலை அலையாய் நெளிந்த கூந்தல் வாராததால் 'புஸ்' என்று காடாய் மண்டிக் கிடந்தது தலையில். அது கூட அழகாய்த்தான் இருந்தது.

'டைட்ஸ்' பாண்ட் போட்டிருந்ததால் தானோ என்னவோ முன்புறம் சாய்ந்த தோற்றம்!

அவள் தந்தையின் பெயரைச் சொல்லி ''அவர் வீடு இதுதானே?'' என்று அவன் கேட்பதற்குள் அவனுக்கு இன்னொரு முறை வியர்த்து விட்டது.

தன் புடவைத் தலைப்பால் அவன் முகத்தின் வியர்வைத் துளிகளை ஒற்றி எடுக்க வேண்டும் என்ற அர்த்தமற்ற, பைத்தியக்காரத்தனமான, அநாகரிக எண்ணம் கூட அவளுள் எழுந்தது. எண்ணங்கள் இதயத்தின் படப்பிடிப்பாக இருக்கலாம். ஆனால் பாசம் அதிகமாகச் செயல்படும் எத்தனை எத்தனையோ செயல்கள் பைத்தியக்காரத்தனங்களாகத்தான் தோன்றுகின்றன!

அவனைப் பலமுறை நாடகங்களில் கண்டு ரசித்திருக்கிறாள். நல்ல குணச்சித்திர நடிப்பு எனத் தன்னுள் எண்ணியும் இருக்கிறாள்.

இன்று நடிப்பின் 'அசல்' அவள் முன்னே நாடகத்தின் கதாநாயகனைப் போல் நின்ற



போது உள்ளம் சற்றுத் தடுமாறத்தான் செய்தது.

"அப்பா வீட்டில் இல்லையா?"

அவள் சுய உணர்வு பெற்றாள்.

"ஓ! டிக்கெட் விற்க வந்திருக்கிறீர்களா?"

"ஆமாம்! ....நிதிக்காக நாடகம் போடுகிறோம். ஐம்பது ரூபாய் டிக்கட் ஒன்று..."

"ஐம்பது ரூபாய் டிக்கட்டா? அம்மாடியோ....!"

"பரவாயில்லையே... 'ரைமிங்'காப் பேசுகிறீர்களே!"

"உங்கள் நாடகத்தின் வசனங்களை விடவா 'ரைமிங்கா' இருக்குது?"

"இந்தாருங்கள் டிக்கெட்" — என்று அவன் கிழித்தபோது, "ஐயையோ!" என்று பதறினாள் அவள்.

"அப்பா கோபிப்பார்..." என்று அவள் தயங்கினாள்.

"அப்பாதான் கேட்டிருக்கிறார். பணம் தந்தால் வாங்கிக் கொள்கிறேன். இல்லையென்றால் என் 'டொனேஷன்'...."

அவள் திடீரென்று சிரித்தாள்.

"'டொனேஷன்' வசூல் பண்ண வந்தவர், 'டொனேஷன்' தந்துவிட்டுப் போகிறீர்களே! இப்படி டிக்கெட் விற்றால் அவ்வளவுதான்!"

"எல்லா இடங்களிலும் இப்படி டிக்கட் விற்பேனா?"

அவன் போய்விட்டான். அவன் கடைசியாகச் சொன்ன அந்த வாக்கியம் அவள் காதுகளில் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

'எல்லா' என்ற பதத்தைச் சற்று அழுத்தமாகவே சொன்னானோ? இதற்குப் பிறகு அவன் பலமுறை அங்கு வந்து போய் விட்டான்.

ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு காரணம்! வந்தால் பொழுது போவது தெரியாமல் இருவரும் பேசிக் கொண்டிருப்பார்கள். இடையில் அவள் தந்தை எழுந்து போய்விடுவார். அவருக்கு இவர்கள் 'டாப்பிக் போர்' அடிக்கும்!

எத்தனை நேரம்தான் சினிமாவைப் பற்றியும் நாடகத்தைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்க முடியும்? அவர்களுக்குத்தான் பைத்தியம் பிடித்திருக்கிறது: பேசுகிறார்கள். கேட்பதற்கு இவரும் பைத்தியமா என்ன?

அன்று அவள் மிகவும் சுவாரசியமாக நாடகக் கதையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தாள். தான் முன் தினம் படித்த ஏதோ கதையைப் பற்றி அவள் கூறிக் கொண்டிருந்தாள். அந்தக் கதை நாடகத்துக்கு ஏற்றதெனக் கூறினாள்.

"அந்த 'லவ்' உண்டாகும் 'சீனே' ரொம்பப் பிரமாதம் மிஸ்டர் செல்வம். எல்லா நாடகங்களையும் போல் 'போர்' அடிக்கும் காதல் வசனம் இல்லை. எல்லாம் 'எக்ஸ்பிரஷன்!' காதல் உண்டாகும் அந்தச் சூழ்நிலையே பிரமாதம். தனித்த இடம். அவனும் அவளும் மட்டுமே இருக்கிறார்கள். அவளை அவன் பார்க்கிறான். அவன் கண்கள் அவள் முகத்தை முதலில் பார்க்கின்றன. பிறகு அந்தக் கண்கள்..."

அவள் சுவாரசியமாகக் கதை சொல்லிக் கொண்டிருந்தாள். முதலில் அவனும் சுவாரசியமாகத்தான் கேட்டான். ஆனால்.... ஆனால்.... கேட்கக் கேட்க....?

காதின் உணர்வுகள் இற்று விழ, கண்ணின் உணர்வுகள் பலம் பெற்றன. அவன் அவளைப் பார்த்தான். புதுக் கோணத்தில் பார்த்தான். அந்த முகம், அதில் படபடத்த விழிகள், துடிக்கும் உதடுகள், மென்மையான உடலமைப்பு, இளமை பொங்கும் எழிலுருவம்... அவள் உணர்ச்சியுடன் கதை சொன்ன போது, உதடுகள் கூடிப் பிரிந்த லாகவம், கைகள் அசைந்த நளினம்...ஏன், எல்லாமே ஓர் அழகிய காவியத்தைப் போலிருந்தன. காவியத்தின் ஏடுகளைப் புரட்டிப் பார்க்க அவனுள் ஓர் ஆசை எழுந்தது.

அவள் 'சட்'டென்று நிதானத்துக்கு வந்தாள். அவன் பார்வை இன்று அவளுக்கும் புதிது. அவள் இத்தனை நாட்கள் தவித்த தவிப்பின் பதிலா இது? அவள் பேச்சு தடைப்பட்டது!

"ஏன் நிறுத்தி விட்டீர்கள்?"

"நீங்கள் கேட்கவேயில்லை!"

"இல்லை... இப்போதுதான் நான் கேட்க ஆரம்பித்திருக்கிறேன். சுவையான கட்டத்தில் நிறுத்தி விடாதீர்கள்..."

அவள் ஒரு கணம் தடுமாறினாள். 'பொறி' வைத்துப் பேசுகிறானோ?

சரியான சமயத்தில் அவள் தந்தை வந்து தொலைத்தார். இருவரும் விடைபெற்றனர்.

மறுநாள் அவன் வரவில்லை. ஆனால் 'போன்' வந்தது. "நான் அவசரமாக வெளியூர் போகிறேன். ஒரு வாரத்தில் வந்து விடுவேன். வந்தவுடன் முதலில் உன்.... உன்னைப் பார்க்கத்தான் வருவேன். அந்தக் கதையை மீண்டும் சொல்வாய் அல்லவா? மறந்து விடாதே!"

அவள் செயலற்று நின்றாள்.

அவள் காத்திருந்த நேரம்! அவன் அவள் மனத்தைப் புரிந்து கொண்ட இன்பம் இந்த ஒரு வாரமும் ஒரு யுகமாகக் கழிந்தது.

இன்றும் அவன் வரவில்லை! அவளுள் வேதனையும் அச்சமும் படர்ந்தன. காத்துக் கிடக்கும் இந்த நேரத்தில் ஏதாவது எழுதினால் என்ன? அவள் காகிதமும் பேனாவுமாய் அமர்ந்த போதுதான் அந்தச் சம்பவம் நடந்தது!

அவள் நினைத்திராத திருப்பம் அது! அவள் உள்ளம் செயலற்று, மரத்துத்தான் போய்விட்டது. பெண்மைக்குள் பொறுமை, அன்பு என்ற தெய்வீக சக்திகளை ஆண்டவன் படைத்ததால்தானோ என்னவோ அவள் சமாளித்துக் கொண்டாள்.

கசக்கும்போதுதான் சாறு கிடைக்கிறது. வேதனையால் கசக்கப்பட்ட உள்ளத்திலிருந்து ஒரு முழுமையான கதை பிறந்தது.

அது அவள் கதைதான்!

அவனைச் சந்தித்ததிலிருந்து அவளுள் ஏற்பட்ட உணர்ச்சியின் சிதறல்களை அழகுள்ள கதையாக உருமாற்றிக் கல்யாணத்தில் முடித்திருந்தாள். அவன் வராத நாட்களில் அந்த உள்ளம் பட்ட பாட்டை அழகுச் சித்திரமாகத் தீட்டியிருந்தாள். பெண்மையின் பொறுமையையும், காதலனைக் காணாத காதலியின் வேதனை உள்ளம் பட்ட பாட்டையும் அற்புதமாக விளக்கியிருந்தாள்.



# ISN'T SHE BEAUTIFUL? OF COURSE, SHE IS!




*she owes her beauty to* **AFGHAN SNOW** *Beauty Aids-the aids to beauty that have aided millions of maidens to glamour and irresistible charm.'*

**AFGHAN SNOW**—AN EXCELLENT ALL ROUND COMPLEXION AID.
**AFGHAN SNOW**—AN IDEAL SKIN TONIC THAT VANISHES PIMPLES AND WRINKLES. PRESERVES THE PETAL SOFT DEWY COMPLEXION. AVAILABLE IN 4 SIZES.
**AFGHAN FACE POWDER**—AVAILABLE IN 4 SHADES FOR FLAWLESS COVERAGE AND SMOOTHNESS.
**AFGHAN LIPSTICK**—A WIDE RANGE OF SHADES TO KEEP YOUR LIPS LUSTROUS AND MOIST.
**AFGHAN NAIL POLISH**—IN SPARKLING COLOURS FOR EVERY TASTE. IT HELPS PROTECT BRITTLE NAILS.
**AFGHAN CREAM CAKE**—A CREAM BLENDED POWDER IN A HANDY COMPACT. AN INSTANT BEAUTY AID THAT ADDS A SOFT MATTE FINISH TO ANY MAKE-UP, IMPARTING DELICATE NATURAL BEAUTY

## AFGHAN SNOW BEAUTY AIDS

E. S. PATANWALA BOMBAY-77 (INDIA)









காதலனைப் பிரிந்த காதலியின் நிலையின் உணர்ச்சிகரமான உயிர்ச் சித்திரமாக அந்த இடம் அமைந்திருந்தது.

மீண்டும் மீண்டும் படித்தாள். அவளுக்கே பெருமையாக இருந்தது. திருப்தியுடன் அவள் நிமிர்ந்தபோது...? எதிரில் நிழலாடியது.

''செல்வம்!'' உற்சாகமாக வந்துகொண்டிருந்தான் அவன். நிலாவின் கைகளில் இருந்த காகிதக் கற்றையின் மீது அவன் பார்வை விழுந்தது.

''இந்தப் பத்து நாட்களில் பேச முடியாததையெல்லாம் கடிதமாக — பெரிய கடிதமாக எழுதியிருக்கிறாயா?''

அவள் வறட்சியாகச் சிரித்தாள்.

''இது கடிதமல்ல; கதை.''

''கதையா? எங்கே இப்படிக் கொண்டா!''

''வந்ததும் வராததுமாக இதைப் படிக்க வேண்டாம். எங்கே போனீர்கள்? ஏன் இத்தனை நாள்? ஒரு வாரம் என்று பத்து நாட்கள் ஆக்கிவிட்டீர்களே?'' — தடுமாறிய படி கேட்டாள் அவள்.

அவன் அசந்து போய்விட்டான். காதலியின் உரிமை கடந்து மனைவியின் உரிமைக்கு வந்து விட்டாளா?

உண்மைதான். மானசிக வாழ்வில் அவள் மனைவியாய் அவன் அரசாட்சி செய்வது அவனுக்கு எங்கே தெரியப் போகிறது?

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? இந்தாருங்கள் கதை. படியுங்கள். அதற்குள் காப்பி டிபனுடன் வருகிறேன்.'' அவள் உள்ளே போய்விட்டாள். காப்பி டிபனுடன் அவள் திரும்பி வந்தபோது வெகு நேரம் ஆகியிருந்தது! வேண்டுமென்றுதான் செய்தாளோ? அவள் வந்தபோது? வாசலறை காலியாக இருந்தது. செல்வம் எங்கே? அங்கு வைக்கப்பட்டிருந்த கடிதம் பதில் தந்தது.

''அன்புள்ள நிலா,

உன் கதை என் கண்களைத் திறந்துவிட்டது. பெண் உள்ளத்தின் மெல்லிய தன்மைகளை விவரித்து, ஏமாற்றப்பட்டால் அது நசிந்து நாசமாகும் இயல்புகளை நன்கு விளக்கியிருக்கின்றாய். நன்றி. நீ எழுதியது போல் நான் என் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளப் போகிறேன். ஆனால் ஒரு திருத்தம். நீ நினைப்பது போன்றதல்ல நம் வாழ்க்கை. என் வாழ்க்கை. ஆம். என்னை மன்னித்துவிடு. எனக்கு ஏற்கனவே மணமாகி விட்டது! பெரியவர்களுக்காகச் செய்து கொண்ட பலவந்தத் திருமணம். அழகற்ற என் மனைவியின் முகத்தைப் பார்க்கக் கூடப் பிடிக்காமல், நான் ஊர் சுற்றிக் கொண்டு இருந்தேன். என்மீது ஒருசில நாட்கள் மட்டுமே அன்பு செலுத்திய உன் உள்ளத்தில் இத்தனை ஏக்கங்களும், தடுமாற்றங்களும் இருக்குமானால், எனக்காகவே தன் வாழ்வையே அர்ப்பணித்தவளுக்கு எத்தனை வேதனை இருக்கும்! என்னை மன்னித்துவிடு. நண்பர்களுடன் சினிமா போனேன், ஊர் சுற்றினேன். இங்கும் அங்கும் திரிந்தேன். எனக்காக என் அன்பு மனைவி எத்தனை நாட்கள் காத்துக் காத்துப் பொறுமை இழந்தாளோ? என்னுடன் எத்தனை எத்தனையோ இன்பக் கதைகள் பேச வேண்டும் என்ற அவள் உணர்ச்சிகளை மறந்து, மரக்கட்டை இதயம் படைத்த மனிதனாக நண்பர்களுடன் கூத்தடித்துக் கொண்டிருந்தேனே! நான் எவ்வளவு பெரிய பாவி! என் கண்களைத் திறந்து விட்ட உன் கதைக்கு நன்றி. மனைவியிடம் மன்னிப்புக் கேட்ட பிறகு வருகிறேன். உனக்காக நான் வாங்கி வந்த பரிசு இத்துடன் இருக்கிறது. அன்பு அண்ணன் தந்த ஆசைப் பரிசாக அதை ஏற்றுக்கொள்!

இப்படிக்கு,
செல்வம்''

நீர் மல்கும் விழிகளுடன் நிலா மேஜையைப் பார்த்தாள். தந்தத்திலான் செய்யப்பட்ட ரதியும், மன்மதனும் ஒருவரையொருவர் கட்டியணைத்தபடி அவளைப் பார்த்துச் சிரித்தனர்.

விரக்திச் சிரிப்புச் சிரித்தாள் அவள்.

'செல்வம்! நான் காதல் உணர்ச்சியுடன் கதை எழுத ஆரம்பித்தபோதுதான் உங்களுக்கு மணமான செய்தி புரிய வந்தது! ஏமாற்றிவிட்டீர்களே என்ற வேதனையும், தங்களை எதிர்பார்ப்பதில் நான் பெற்ற துன்பமும் முழுமை பெற்றுத்தான் இந்தக் கதை உருவானது! நான் விரும்பிய நல்ல முடிவு இவ்வளவு சீக்கிரம் கிடைக்கும் என எதிர்பார்க்கவில்லைதான்! எப்படியோ என் கதை ஆயிரமாயிரம் வாசகர்களின் உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டுபண்ணா விட்டாலும் ஒரு தனி மனிதனையாவது திருத்தும் தன்மை பெற்றதாக இருந்ததே என எண்ணிப் பெருமைப்படுகிறேன். என் ஏமாற்றம் எனக்குப் புதிதல்ல.

அவள் காலடியில் அவன் எழுதிய முதல் கதை படபடத்தது!




**பாரதி மகன் சொல்லக் கேட்போம்**
**இதை விடவா?**
**தமிழ்க் கவிஞர்களுக்கு அழைப்பு**
**பெருங்குளம் ஆலயம்**
**பள்ளிக்குப்பின் புராணம்**

ஆதவன் உலகிற் கன்ன மளிப்பவன்
அவனருள் மழையால் உலகம் செழிக்கும்
என்று பலபல இயம்பக் கேட்டோம்

சூரியனொளியால் உயிர்கள் வாழும்
சுதந்திர நாட்டில் மனிதர் வாழ்வார்
என்று பெரியோர் புகலக் கேட்டோம்.

உயர் தமிழ்வாழ ஆங்கிலம் வேண்டும்
உதயசூரியனுக்குதவி புரியும்
உத்தமன் சத்திய வாக்கினைக் கேட்டோம்

தமிழர் வாழ்வைத் தழைக்க வைக்க
தமிழை உலகில் வாழ வைக்க
ஆங்கிலம் துணையென்றுரைக்கக் கேட்டோம்

தமிழர் வாழ்க தமிழ் மொழி வாழ்க
தரணியில் தமிழ் மொழி தழைத்து வளர்க
எனத் தவமுனி ஆசீர்வதிக்கக் கேட்டோம்.

தியாகராயநகர் — சகுந்தலா பாரதி
27-8-67

ஆங்கிலம் அன்னிய மொழியாம்! ஆனால் அந்த அன்னிய மொழியின் உதவியால்தான் காந்திஜி போன்றவர்கள் நாட்டின் விடுதலையைத் தேடித் தந்தனர். மேலே ஏற உதவிய ஏணியை உதைத்துத் தள்ளுவதா தர்மம்? ஆங்கிலத் தொடர்பில் நாம் கற்றுக் கொண்ட நடைமுறைகளில் சுதந்திரத்துக்குப் பின்னரும் நாம் எதை விலக்கினோம்? உடையணியும் பாணியையா? கிராப் வெட்டிக் கொள்வதையா? ராக் அண்டு ரோல் நாட்டியத்தையா? குடிப் பழக்கத்தையா? குதிரைப் பந்தயத்தையா? விநோத ஆண் பெண் சமதர்மத்தையா? குடும்பப் பிரிவினையையா? எதையும் இல்லையே. 'சுதேசி, சுதேசி' என்று முழங்குபவர்கள், அறிவுக்கு உணவளிக்கும், உலகத் தொடர்பை பயனிக்கும், நாட்டின் ஒற்றுமையை அளிக்கும் ஆங்கில மொழியையா வெறுக்க வேண்டும்?

பெங்களூர்
30-8-67 — எஸ். கலியாணசுந்தரம்

பாரதி நண்பர் பரலி சு. நெல்லையப்பரின் மேற்பார்வையில் தொகுக்கப்படும் "எதிரொலிகள்" (கவிதை நூல்) முடிவடையும் தறுவாயில் உள்ளது. பங்குபெற விரும்பும் கவிஞர்கள் அறிமுகத்தோடும், சமரசமான இரு கவிதைகளோடும், கட்டணமாக ரூ. 3-ம் சேர்த்து அனுப்பிவைக்க வேண்டுகிறோம்.

முடிவு நாள்: 20-9-67
தொடர்பு கொள்க: 3-93, சம்பந்தம் தெரு, பாரதிபுரம், சென்னை-44

சென்னை
30-8-67 — சு. விசுவநாதன்

எங்கள் ஊராகிய 'பெருங்குளம்' நீர் நிரம்பிய பெரிய குளத்தை உடையதால் இந்தப் பெயரைப் பெற்றது. தலப் பெயர் 'குளந்தை'. உக்கிரபாண்டியன் கோவிலெடுத்துப் பூஜை செய்தமையால் எங்கள் ஊர் சிவபெருமானுக்கு 'உக்கிர வழுதீசுவரர்' என்னும் திருநாமம் வழங்கப்படுகிறது. இங்குதான் உக்கிர பாண்டியர் முன் நிலையில் நக்கீரனார் முதலிய சங்கப் புலவர்கள் கூடித் திருக்குறள் அரங்கேற்றம் நடந்ததென்றும் சொல்லப்படுகிறது. இதற்கு அடையாளமாக எங்கள் ஊர் சிவாலயத்தில் 49 புலவர்களின் வடிவமும் உக்கிரபாண்டியர் வடிவமும் அமைந்துள்ளன. இது பற்றித் தமிழ்த் தாத்தா 'என் சரித்திரம்' (பக். 932ல்) குறிப்பிட்டுள்ளார். இத்தகைய சிறப்புப் பெற்ற இச் சிவன் கோவில் ஜீர்ணோத்தாரணப் பணி 1960 ஆம் ஆண்டு வாக்கில் தொடங்கப்பட்டது. நிதி வசதி இன்மையால் பணி நின்றுவிட்டது. சைவ சமயப் பெரியவர்களும், அறநெறி நிலைய அதிகாரிகளும் ஆவன செய்யக் கேட்டுக் கொள்கிறோம்.

பெருங்குளம், — சி. பிரமநாயகம்
1-9-67 — வி. மாயகிருஷ்ணன்

பள்ளிச் சிறுவர் சிறுமியர் வீடு வந்த பின் அயர்ந்து காணப்படுவதால், தனிப் புராணப் பிரசங்கங்களில் அவ்வளவு நாட்டம் காட்டுவதில்லை. நேரமும் கிடைப்பதில்லை. இந்நிலையிலும் வாரந்தோறும் 'கல்கி'யில் வெளியாகும் பல்சுவைப் பக்கங்களும், குட்டிக் கதையும் அவர்களுக்கு உற்சாகத்தை அளிக்கிறது. போட்டி போட்டுக் கொண்டு படிக்கிறார்கள். இதேபோல் வாராவாரம் ஒரு புராணக் கதை கல்கியில் வந்தால் உற்சாகத்தோடு படித்துப் பயனடைவார்கள்.

ஸ்ரீ ரா. கணபதி அவர்கள் சிறுவர்களுக்காகச் சிறு சிறு படங்களையும் சேர்த்துக் குழந்தைகளுக்குக் கதை சொல்லும் பாணியில் "கண்ணன் பாதம்" போல் எழுதலாமே?

பர்ஹாம்பூர்,
31-8-67 — கௌசல்யா

[இந்த நேயரே எதிர்பார்க்க முடியாத ஒரு பெரும் அதிருஷ்டம் - கல்கி வாயிலாக நம் குழந்தைகளுக்குக் கிடைக்கும் வாய்ப்பு - நெருங்கி வருகிறது என்பதைப் பரம ரகசியமாகச் சொல்லி வைக்கிறோம். —ஆசிரியர்]

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

